


ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

ஸ்ரீமத்கம்பராமாயணம்.

நான்காவது,

# கிட்கிந்தா காண்டம்.

கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்தது.

இஃது

மதுரை தமிழ்ச்சங்கவித்துவான்

ஸ்ரீமான் மு. ரா. அருணாசலக்கவிராயரவர்களால்

பரிசோதிக்கப்பெற்று

மதுரை புத்தகசாலை

எஸ். கூடலிங்க சோதிடரால்

மதுரை ஸ்ரீ ராஜாம்பாள் அச்சியந்திரசாலையில் டைட்டில்மட்டும்

பதிப்பிக்கபெற்றது.

1919




ஸ்ரீ

ஸ்ரீமத்கம்பராமாயணம்

நான்காவது

# கிட்கிந்தாகாண்டம்.

## முதலாவது - பம்பைப்படலம்.

காப்பு.

மூன்றுருவெனக்குணமும்மையாமுதற்
றோன்றுருவெவையுமிம்முதலைச்சொல்லுதற்
கேன்றுருவமைந்தவுமிடையினின்றவர்
சான்றுருவுணர்வினுக்*குணர்வதாயினான். (க)

### நூல்.

தேன்படிமலரதுசெங்கண்வெங்கைமாத்
தான்படிகின்றதுதெளிவுசான்றது
மீன்படிமேகமும்படிந்துவேலைநீர்
வான்படிந்துலகிடைக்கிடந்தமாண்பது. (உ)

ஈர்ந்தநுண்பளிங்கெனத்தெளிந்தவீர்ம்புனல்
பேர்ந்தொளிர்நவமணிபடர்ந்தபித்திகை
சேர்ந்துழிச்சேர்ந்துழிநிறத்தைச்சேர்தலான்
ஓர்ந்துணர்வில்லவருள்ளமொப்பது. (௩)

குவான்மணித்தடந்தொறும்பவளத் † கோலியர்
கவானரசன்னமும்பெடையுங்காண்டலின்
தவாநெடுவானகந்தயங்குமீனொடும்
உவாமதியுலப்பிலவுதித்ததொப்பது.

ஓதநீருலகமுமுயிர்கள்யாவையும்
வேதபாரகரையும்விதிப்பவேட்டனள்
சீதம்வீங்குவரியைச்செருக்குமாமரு
காதிகாதலன்றருகடலினன்னது. (ரு)



* குவந்ததாயினான்எனவும்பாடம். † காலிவர்எனவும்பாடம்.

எற்பொருநாகர்தமிருக்கையீதெனக்
இற்பதோர்காட்சியதெனினுங்கீழுறக்
கற்பகமனையவக்கவிஞர்நாட்டிய
சொற்பொருளாமெனத்தோன்றல்சான்றது. (௬)

களனவிலன்னமேமுதலகண்ணகன்
தளமலர்ப்புள்ளொடுதயங்கவின்னதோர்
இளவியென்றறிவருங்கிளர்ச்சித்தாகலான்
வளநகர்க்கூலமேபோலுமாண்பது. (௭)

அரிமலர்ப்பங்கயத்தன்னமெங்கணும்
புரிகுழல்புக்கிடம்புகல்கிலாமையாம்
திருமுகநோக்கலமிறந்துதீர்துமென்
றெரிபுகுவனவெனத்தோன்றுமீட்டது. (௮)

காசடைவிளக்கியகாட்சித்தாயினும்
மாசடைபேதைமையிடைமயக்கலான்
ஆசடைநல்லுணர்வனையதாமெனப்
பாசடைவயின்றெறும்பரந்தபண்பது. (௯)

களிப்படாமனத்தவன்காணிற்கற்பெனும்
கிளிப்படாமொழியவள்விழியின்கேளெனத்
துளிப்படாநயனங்கடுளிப்பச்சோருமென்
றெளிப்படாதாயிடையொளிக்குமீனது. (௧௦)

கழைபடுமுத்தமுங்கலுழிக்கார்மத
மழைபடுதரளமுமணியும்வாரிநேர்
இழைபடர்ந்தனையநீரருவியெய்தலான்
குழைபடுமுகத்தியர்கோலமொப்பது. (௧௧)

பொங்குவெங்கடகரிபொதுவினுடலின்
கங்குலினெதிர்பொருகலவிப்பூசலின்
அங்கநொந்தலசியவிலையினுய்வனை
மங்கையர்வடிவெனவருந்துமெய்யது. (௧௨)

விண்டொடர்நெடுவரைத்தேனும்வேழத்தின்
வண்டுளர்நறுமதமழையுமண்டலான்
உண்டவர்பெருங்களியுறலினேதியர்
தொண்டையங்கனியிதழ்த்தோன்றல்சான்றது. (௧௩)

ஆரியமுதலியபதினெண்பாடையிற்
பூரியரொருவழிபுகுந்தபோன்றன
ஓர்கிலகிளவிகளொன்றொடொப்பில
சோர்விலவிளம்புபுட்டுவென்றுகின்றது. (௧௪)

தானுயிருறத்தனிதழுவும்பேடையை
ஊனுயிர்பிரிந்தெனப்பிரிந்தவோதிமம்
வானரமகளிர்தம்வயங்குநூபுரத்
தேனுகுமழலையைச்செவியினேற்பது. (கரு)

ஈறிடலரியமால்வரைநின்றீர்த்திழி
ஆறிடுவிரையகிலாரமாதியா
ஊறிடவொண்ணகருரைத்தவெண்டளச்
சேறிடுபொணியிற்றிகழுநேர்து. (கசா)

வேறு. நவ்விநோக்கியரிதழ்நிகர்குமுதத்துநறுந்தேன்
வவ்வுமாந்தரிற்களிமயக்குறுவனமகரம்
எவ்வநீங்கியபிறப்பினொடிறப்பிவையென்னக்
கவ்வுமீனொடுமுழுகுவவெழுவனகரண்டம். (கஎ)

கவளயானையன்னாற்கந்தக்கடிநாறுங்கமலத்
தவளையீகிலமாவதுசெய்துமென்றருளித்
திவளவன்னங்கடிருநடைகாட்டுவசெங்கண்
குவளைகாட்டுவதுவரிதழ்காட்டுவகுமுதம். (கஅ)

பெய்கலன்களினிலங்கொளிமருங்கொடுபிறழ
வய்கலும்புனல்குடைபவர்வானரமகளிர்
செய்கையன்னங்களேந்தியசேடியரென்னப்
பொய்கையன்னங்களேந்தியபூங்கொம்பர்பொலிவ. (ககூ)

ஏலுநீர்நிழலிடையிடையெறித்தலிற்படிகம்
போலும்வார்புனல்புகுந்துள்வாமெனப்பொங்கி
ஆலுமீன்கணமஞ்சினவலம்வரவஞ்சிக்
கூலமாமரத்திருஞ்சிறைபுலர்த்துவகுரண்டம். (உ0)

அங்கொர்பாகத்தினஞ்சனமணிநிழலடையப்
பங்குபெற்றொளிர்பதுமராகத்தொளிபரப்பக்
கங்குலும்பகலுமெனப்பொலிவெய்துகரைய
மங்கைமார்தடமுலையெனப்பொலிவனவாளம். (உக)

வலிநடத்தியவாளெனவாளைகள்பாய
ஒலிநடத்தியதிரைதொறுமுருள்வனநீர்நாய்
கலிநடைக்கழைக்கண்ணுளரெனநடங்கவினப்
பொலிவுடைத்தெனத்தேரைகள்புகழ்வனபோலும். (உஉ)

அன்னதாகியவகன்புனற்பொய்கையையணுகிக்
கன்னியன்னமுங்கமலமுமுதலியகண்டான்
தன்னினீங்கியதளிரியற்குருகினன்றளர்வான்
உன்னுநல்லுணர்வொடுங்கிடப்புலம்பிடலுற்றான். (உந)

வேறு. வரியார்மணிக்கால்வாளமேமடவன்னங்காளேனைநீங்கத்
தரியாணடந்தாளில்லளேற்றளர்ந்தபோதுந்தகவேயோ
எரியாநின்றவாருயிருக்கிரங்கினாலீதிசையன்றே
பிரியாதிருந்தேற்கொருமாற்றம்பேசிற்பூசல்பெரிதாமோ. (௨௪)

வண்ணநறுந்தாமரைமலரும்வாசக்குவளைநாண்மலரும்
புண்ணினெரியுமொருநெஞ்சம்பொதியுமருந்திற்றரும்பொய்காய்
கண்ணுமுகமுங்காட்டுவாய்வடிவுமொருகாற்காட்டாயோ
உண்ணுமென்னினஃதுதவாதுலோவினாருமுய்த்தாரோ. (௨௫)

விரிந்தகுவளைசேதாம்பல்விரைமென்கமலங்கொடிவள்ளை
தரங்கங்கெண்டைவராலாமையென்றித்தகையதமைநோக்கி
மருந்தினனையாளவயவங்களவைநிற்கண்டேன்வல்லரக்கன்
அருந்தியகல்வான்சிந்தினவோவாவியுரைத்தியாமன்றே. (௨௬)

ஓடாநின்றகளிமயிலேசாயற்கொதுங்கியுள்ளழிந்து
கூடாதாரிற்றிரிகின்றநீயுமாகங்குளிர்ந்தாயோ
தேடாநின்றவென்னுயிரைத்தெரியக்கண்டாய்சிந்தையுவந்
தாடாநின்றாயாயிரங்கணுடையாய்க்கொளிக்குமாறுண்டோ. (௨௭)

அடையீரெனினுமொருமாற்றமறிந்ததுரையீரன்னத்தின்
பெடையீரொன்றும்பேசீரோபிழையாதேற்குப்பிழைத்தீரோ
நடைநீரழியச்செய்தாரேநடுவிலாதார்நணியவரோ
டுடையீர்பகைதானுமைநோக்கியுவக்கின்றேனைமுனிவீரோ. (௨௮)

பொன்பால்பொருவும்விரையல்லிபுல்லிப்பொலிந்தபொலந்தாது
தன்பாற்றழுவுங்குழல்வண்டுதமிழ்ப்பாட்டிசைக்குந்தாமரையே
என்பாலில்லையப்பாலோவிருப்பாரல்லர்விருப்புடைய
உன்பாலில்லையென்றக்காலொளிப்பாரோடுமுறவுண்டோ. (௨௯)

ஒருவாசகத்தைவாய்திறந்திட்டுதவாய்பொய்கையுள்ளொடுங்கும்
திருவாயனையசேதாம்பற்கயலேகிடந்தசெங்கிடையே
வெருவாவெதிர்நின்றமுதுயிர்க்கும்வீழிச்செவ்விக்கொழுங்கனிவாய்
தருவாயவ்வாயின்னமிழ்துந்தண்ணென்மொழியுந்தாராயோ. (௩௦)

அலக்கணுற்றேற்குற்றுதவற்கடைவொன்றுண்டேகொடிவள்ளாய்
மலர்க்கொம்பனையமடச்சீதைகாதேமற்றொன்றல்லையால்
பொலக்குண்டலமுங்கொடுங்குழையும்புனைதாழ்முத்தின்பொற்றோடும்
விலக்கிவந்தாய்விளம்பாதேயின்னும்பூசல்விரும்புதியோ. (௩௧)

பஞ்சுபூத்தவிரற்பதுமம்பவளம்பூத்தவடிவாளென்
நெஞ்சுபூத்ததாமரையினிலயம்பூத்தாணிறம்பூத்த
மஞ்சுபூத்தமலர்பூத்தகுழலாள்கண்போன்மணிக்குவளாய்
நஞ்சுபூத்ததாலென்னாகுவாயென்னைநலிவாயோ. (௩௨)

வேறு. என்றயாவுயிர்க்கின்றவனேடவிழ்
கொன்றையாவிப்புறத்திவைகூறியான்
பொன்றயாதும்புகல்கிலைபோலுமால்
வன்றயாவிலியென்னவருந்தினான். (௩௩)

வாரளித்தழைமாப்பிடிவாயிடைக்
காரளிக்கலுழிக்கருங்கைம்மலை
நீரளிப்பதுநோக்கினனின்றனன்
பேரளிக்குப்பிறந்தவில்லாயினான். (௩௪)

ஆண்டவள்ளலையன்பெனுமாரணி
பூண்டதம்பிபொழுதுகழிந்ததால்
ஈண்டிரும்புனறோய்ந்துன்னிசையென
நீண்டவன்கழறாழ்நெடியோயென்றான். (௩௫)

அரைசுமவ்வழிநின்றரிதெய்தியத்
திரைசெய்தீர்த்தமுஞ்செய்தவவுண்மையால்
வரைசெய்மாமதவாரணநாணுற
விரைசெய்பூம்புனலாடலைமேயினான். (௩௬)

நீத்தநீரினெடியவன்மூழ்கலும்
தீத்தகாமத்தெறுகதிர்த்தீயினால்
காய்த்திரும்பைக்கருமகக்கம்மியன்
தோய்த்ததண்புனலொத்ததத்தோயமே. (௩௭)

வேறு. ஆடினானன்னமாயருமறைகள்பாடினான்
நீடுநீர்முன்னைநூனெறிமுறையினேமிதாள்
சூடினான்முனிவர்தந்தொகுதிசெறிசோலைவாய்
மாடுதான்வைகினானெரிகதிரும்வைகினான். (௩௮)

அந்தியாள்வந்துதானணுகவவணணுகுறாச்
சந்தவார்கொங்கையாடனிமைதனிநாயகன்
சிந்தியாநொந்துதேய்பொழுதுதெறுசீதநீர்
இந்துவானுந்துவானெறிகதிரினானென. (௩௯)

வேறு. பூவொடுங்கினவிரவுபுள்ளொடுங்கினபொழில்கள்
மாவொடுங்கினமரனுமிலையொடுங்கினகிளிகள்
நாவொடுங்கினமயில்கணடமொடுங்கினகுயில்கள்
கூவொடுங்கினபிளிறுகுரலொடுங்கினகளிறு. (௪0)

மண்டுயின்றனநிலையமலைதுயின்றனமறுவில்
பண்டுயின்றனவிரவுபணிதுயின்றனபகரும்
விண்டுயின்றனகழுதும்விழிதுயின்றனபழுதில்
கண்டுயின்றிலநெடியகடறுயின்றனகளிறு. (௪௧)

பொங்கிமுற்றியவுணர்வுபுணர்தலும்புகையினொடு
பங்கமுற்றனையவினைபரிவுறும்படிமுடிவில்
கங்குலிற்றதுகமலமுகமெடுத்ததுகடலின்
வெங்கதிர்க்கடவுளெழவிமலன்வெந்துயரினெழ. (௪௨)

காலையேகடிதுவரவேகினார்கடல்கவினு
சோலையேமலைதழுவுகானநீணெறிதொலைய
ஆலையெய்துழனியகனாடரார்கலியமிழ்து
போலவேயுரைசெய்புனமானைநாடுதல்புரினார். (௪௩)

பம்பைப்படலம் முற்றிற்று.

---

## உ - ஆவது. அநுமப்படலம்.

---

எய்தினார்சவரிநெடிதேயமால்வரையெளிதின்
நொய்தினேறினரதனினோன்மைசால்கவியரசு
செய்வதோர்கிலனிவர்கடெவ்வராமெனவெருவி
உய்துநாமெனவிரைவினோடினான்மலைமுழையின். (௧)

காலின்மாமதலையிவர்காண்மினோகறுவுடைய
வாலியேவலின்வரவினார்கடாம்வரிசிலையர்
நீலமால்வரையனையர்நீதியாய்நினைதியென
மூலமோர்கிலர்மறுகியோடினார்முழையதனின். (௨)

தாரனீலனைமருவுதாமமாருதியைமுதல்
வீரரோடிரவிசுதன்மேருமால்வரையைநிகர்
பாரமாமலையினொருபாகமோடுதல்புரிய
ஆரமார்பருமதனினாகுமாறுறல்கருதி. (௩)

மானைநாடுதல்புரினார்வாலியேவலின்வருதல்
ஆனவாறெனமறுகியாவிசோர்நிலையர்தொடர்
ஏனைவானரர்சிலருமேகிமாமுழையின்முழு
ஞானநாதரையறிவினாடிமாருதிமொழியும். (௪)

அவ்விடத்தவர்மறுகியஞ்சிநெஞ்சழியமைதி
வெவ்விடத்தினைமறுகுதேவர்தானவர்வெருவல்
தவ்விடத்தினிதருளுதாழ்சடைக்கடவுளென
இவ்விடத்தினிதிருமினஞ்சலென்றிடையுதவி. (௫)

அஞ்சனைக்கொருசிறுவனஞ்சனக்கிரியனைய
மஞ்சனைக்குறுகியொருமாணவப்படிவமொடு
வெஞ்சமத்தொழிலர்தவமெய்யர்கைச்சிலையரென
நெஞ்சயிர்த்தயன்மறையநின்றுகற்பினினினையும். (௬)

தேவருக்கொருதலைவராமுதற்றேவரெனின்
மூவர்மற்றிவரிருவர்மூரிவிற்கரரிவரை
யாவரொப்பவருலகின்யாதிவர்க்கரியபொருள்
கேவலத்திவர்நிலைமைதேர்வதெக்கிழமைகொடு. (௭)

சிந்தையிற்சிறிதுதுயர்சேர்வுறத்தெருமரலின்
நொந்தயர்த்தனரனையர்நோவுறச்சிறியரலர்
அந்தரத்தமரரலர்மானுடப்படிவர்மயர்
சிந்தனைக்குரியபொருடேடுதற்குறுநிலையர். (௮)

தருமமுந்தகவுமிவர்தனமெனுந்தகையரிவர்
கருமமும்பிறிதொர்பொருள்கருதியன்றதுகருதின்
அருமருந்தனையதிடையழிவுவந்துளததனை
இருமருங்கினுநெடிதுதுருவுகின்றனரிவர்கள். (௯)

கதமெனும்பொதுமையிலர்கருணையின்கடலனையர்
இதமெனும்பொருளலதொரியல்புணர்ந்திலரிவர்கள்
சதமனஞ்சுறுநிலையர்தருமனஞ்சுறுசரிதர்
மதனனஞ்சுறுவடிவர்மறலியஞ்சுறுவிறலர். (௧0)

வேறு. என்பனபலவுமெண்ணியிருவரையெய்தநோக்கி
அன்பினனுருகுகின்றவுள்ளத்தனார்வத்தோரை
முன்பிரிந்தனையர்தம்மைமுன்னினானென்னநின்றான்
தன்பெருங்குணத்தாற்றன்னிற்றானலதொப்பிலாதான். (௧௧)

தன்கன்றுகண்டவன்னதன்மையதறுகட்பேழ்வாய்
மின்கன்றுமெயிற்றுக்கோண்மாவேங்கையென்றினையவேயும்
பின்சென்றுகாதல்கூரப்பேய்கணித்திரங்குகின்ற
என்கன்றுகின்றவெண்ணிற்பற்பலவிவரையம்மா. (௧௨)

மயின்முதற்பறவையெல்லாமணிநிறத்திவர்கண்மேனி
வெயிலுறற்கிரங்கிமீதாவிருஞ்சிறைப்பந்தர்வீசி
எயில்வகுத்தெய்துகின்றவினமுகிற்கணங்களெங்கும்
பயில்வுறத்திவலைசிந்திப்பயப்பயத்தழுவும்பாங்கர். (௧௩)

காயெரிகனலுங்கற்கள்கள்ளுடைமலர்களேபோல்
தூயசெங்கமலபாதந்தோய்தொறுங்குழைந்துதோன்றும்
போயினதிசைகடோறுமரனொடுபுல்லுமெல்லாம்
சாய்வுறுந்தொழுவபோலிங்கிவர்களோதருமமாவார். (௧௪)

துன்பினைத்துடைத்துமாயத்தொல்வினைதன்னைநீக்கித்
தென்புலத்தன்றிமீளாநெறியுய்க்குந்தேவரோதாம்
என்பெனக்குருகுகின்றதிவர்கின்றதளவில்காதல்
அன்பினுக்கவதியில்லையடைவென்கொலறிதறேற்றேன். (௧௫)

இவ்வழியெண்ணியாண்டவ்விருவருமெய்தலோடும்
செவ்வழியுள்ளத்தானுந்தெரிவுறவெதிர்சென்றெய்திக்
கவ்வையின்றாகநுங்கள்வரவெனக்கருணையோனும்
எவ்வழிநீங்கியோய்நீயாரெனவிளம்பலுற்றான். (கசு)

மஞ்செனத்திரண்டகோலமேனியமகளிர்க்கெல்லாம்
நஞ்செனத்தகையவாகிநளிரிரும்பனிக்குத்தேம்பாக்
கஞ்சமொத்தலர்ந்தசெய்யகண்ணயான்காற்றின்வேந்தற்
கஞ்சனைவயிற்றில்வந்தேனாமமுமநுமனென்றான். (கஎ)

இம்மலையிருந்துவாழுமெரிகதிர்ப்பரிதிச்செல்வன்
செம்மலுக்கேவல்செய்வேன்றேவநும்வரவுநோக்கி
விம்மலுற்றனையானேவவினவியவந்தேனென்றான்
எம்மலைக்குலமுந்தாழவிசைசுமந்தெழுந்ததோளான். (கஅ)

மாற்றமஃதுரைத்தலோடும்வரிசிலைக்குரிசின்மைந்தன்
தேற்றமுற்றிவனினூங்குச்செவ்வியோரின்மைதேறி
ஆற்றலுநிறைவுங்கல்வியமைதியுமறிவுமென்னும்
வேற்றுமையிவனோடில்லையாமெனவிளம்பலுற்றான். (ககூ)

இல்லாதவுலகத்தெங்குமிங்கிவனிசைகள்கூரக்
கல்லாதகலையும்வேதக்கடலுமேயென்னுங்காட்சி
சொல்லாலேதோன்றிற்றன்றேயார்கொலிச்சொல்லின்செல்வன்
வில்லார்தோளிளையவீரவிரிஞ்சனோவிடைவல்லானோ. (உ0)

மாணியாம்படிவமன்றுமற்றிவன்வடிவமைந்த
ஆணியிவ்வுலகுக்கெல்லாமென்னலாமாற்றற்கேற்ற
சேணுயர்பெருமைதன்னைச்சிக்கறத்தெளிந்தேன்பின்னர்க்
காணுதிமெய்ம்மையென்றுதம்பிக்குக்கழறிக்கண்ணன். (உக)

மற்றுமிவ்வுலகத்துள்ளமுனிவர்வானவர்களாரிச்
சொற்றிறமுடையார்மற்றைச்சுருதியின்றொகுதியாவும்
முற்றறிதருமிம்மாணிமொழிக்கெதிர்முதல்வராய
பெற்றியர்மூவர்க்கேயும்பேராற்றலரிதென்றுன்னா. (உஉ)

எவ்வழியிருந்தான்சொன்னகவிக்குலத்தரசன்யாங்கள்
அவ்வழியவனைக்காணுமருத்தியாலணுகவந்தேம்
இவ்வழிநின்னையுற்றவெமக்கினியென்கொலென்னச்
செவ்வழியுள்ளத்தோனைக்காட்டுதிதெரியவென்றான். (உங)

மாதிரப்பொருப்பொடோங்கிவரம்பிலாவுலகின்மற்றிப்
பூதரப்புயத்துவீரர்நும்மொக்கும்புனிதர்யாரே
ஆதரித்தவனைக்காண்டற்கணுகினிரென்னினன்னான்
தீதவித்தமையச்செய்தசெய்தவச்செல்வநன்றே. (உச)

இரவிதன்புதல்வன்றன்னையிந்திரன்புதல்வனென்னும்
பரிவிலன்சீறப்போந்துபருவரற்கொருவனாகி
அருவியங்குன்றிலென்னோடிருந்தனனவன்பாற்செல்வம்
வருவதோரமைவின்வந்தீர்வரையினும்வளர்ந்ததோளீர். (௨௫)

ஒடுங்கலிலுலகம்யாவுமுவந்தனவுதவிவேள்வி
தொடங்கினமற்றுமுற்றத்தொல்லறர்துணிவரன்றேல்
கொடுங்குலப்பகைஞனாகிக்கொல்லியவந்தகூற்றை
நடுங்கினர்க்கபயநல்குமதனினுநல்லதுண்டோ. (௨௬)

எம்மையேகாத்திரென்றற்கெளிதரோவிமைப்பிலாதோர்
தம்மையேமுதலிட்டான்றசராசரஞ்சமைத்தவாற்றல்
மும்மையேமுலகுங்காக்குமுதல்வர்நீர்முருகற்செவ்வி
உம்மையேபுகல்புக்கேமுக்கிதின்வருமுறுதியுண்டோ. (௨௭)

யாரெனவிளம்புகேனெங்குலத்தலைவற்கும்மை
வீரநீர்பணித்திரென்றான்மெய்ம்மையின்வேலிபோல்வான்
வார்கழலிளையவீரன்மரபுளிவாய்மையாதும்
சோர்விலனிலைமையெல்லாந்தெரிவுறச்சொல்லலுற்றான். (௨௮)

சூரியன்மரபிற்றோன்றிச்சுடர்நெடுநேமியாண்ட
ஆரியனமரர்க்காகியசுரரையாவியுண்ட
வீரியன்வேள்விசெய்துவிண்ணுலகோடுமாண்ட
காரியன்கருணையன்னகண்ணனக்கவிகைமன்னன். (௨௯)

புயறருமதத்திண்கோட்டுப்புகர்மலைக்கிறையையூர்ந்து
மயறருமவுணர்யாருமடிதரவரிவிற்கொண்ட
இயறரும்புலமைச்செங்கோன்மனுமுதல்யாருமொவ்வாத்
தயரதன்கனகமாடத்தடமதிலயோத்திவேந்தன். (௩0)

அன்னவன்சிறுவனாமிவ்வாண்டகையன்னையேவத்
தன்னுடையுரிமைச்செல்வந்தம்பிக்குத்தகவினல்கி
நன்னெடுங்கானஞ்சேர்ந்தானாமமுமிராமனென்பான்
இந்நெடுஞ்சிலைவலானுக்கேவல்செய்யடியன்யானே. (௩௧)

என்றவன்றோற்றமாதியிராவணனிழைத்தமாயப்
புன்றொழிலிறுதியாகப்புகுந்துளபொருள்களெல்லாம்
ஒன்றுமாண்டொழிவுறாமலுணர்த்தினனுணர்த்தக்கேட்டு
நின்றவக்காலின்மைந்தனெடிதுவந்தடியிற்றாழ்ந்தான். (௩௨)

தாழ்தலுந்தகாதசெய்ததென்னைநீதருமமன்றால்
கேழ்விநூன்மறைவலாளாவென்றனனென்னக்கேட்ட
பாழியந்தடந்தோள்வீரமாருதிபதுமச்செங்கண்
ஆழியாயடியேன்றானுமரிக்குலத்தொருவனென்றான். (௩௩)

மின்னுருக்கொண்டவில்லோர்வியப்புறவேதநன்னூல்
பின்னுருக்கொண்டதென்னும்பெருமையாம்பொருளுந்தாழப்
பொன்னுருக்கொண்டமேருபுயத்திற்குமுவமைபோதாத்
தன்னுருக்கொண்டுநின்றான்றருமத்தின்றனிமைதீர்ப்பான். (௩௪)

கண்டிலனுலகமூன்றுங்காலினாற்கடந்துகொண்ட
புண்டரீகக்கணுழிப்புரவலன்பொலன்கொள்சோதி
குண்டலவதனமென்றாற்கூறலாந்தகைமைத்தன்றால்
பண்டைநூற்கதிரோன்சொல்லப்படித்தனன்படிவமம்மா. (௩௫)

தாட்படாக்கமலமன்னதடங்கணான்றம்பிக்கம்மா
கீட்படாநின்றநீக்கிக்கிளர்படாதாகியென்றும்
நாட்படாமறைகளாலுநவைபடாஞானத்தாலும்
கோட்படாப்பதமேயையகுரக்குருக்கொண்டதென்றான். (௩௬)

நல்லனநிமித்தம்பெற்றேநம்பியைப்பெற்றேநம்பால்
இல்லையேதுன்பமானதின்பமுமெய்திற்றின்னும்
வில்லினுயிவனைப்போலாங்கவிகுலக்குரிசில்வீரன்
சொல்லினாலேவல்செய்வானவனிலைசொல்லற்பாற்றே. (௩௭)

என்றகமுவந்துகோலமுகமலர்ந்தினிதினின்ற
குன்றுறழ்தோளினாரைநோக்கியகுரக்குச்சீயம்
சென்றவன்றன்னையின்னேகொணர்கின்றேன்சிறிதுபோழ்து
வென்றியிரிருத்திரென்றுவிடைபெற்றுவிரைவிற்போனான். (௩௮)

அநுமப்படலம் முற்றிற்று. ஆ திருவிருத்தம் - அக.

## ௩ - ஆவது. நட்புக்கோட்படலம்.

போனமந்தரமணிப்புயநெடும்புகழினான்
ஆனதன்பொருசினத்தரசன்மாடணுகினான்
யானுமுன்குலமுமிவ்வுலகுமுய்ந்தனமெனா
மானவன்குணமெலாநினையுமாமதியினான். (க)

மேலவன்றிருமகற்குரைசெய்தான்விரைசெய்தார்
வாலியென்றளவிலாவலியினானுயிர்தெறக்
காலன்வந்தனனிடர்க்கடல்கடந்தனமெனா
ஆலமுண்டவனினின்றருநடம்புரிகுவான். (உ)

மண்ணுளார்விண்ணுளார்மாறுளார்வேறுளார்
எண்ணுளார்திசையுளாரியலுளாரிசையுளார்
கண்ணுளாராயினார்பகையுளார்கழிநெடும்
புண்ணுளாராருயிர்க்கமிழ்தமேபோலுளார், (௩)

சூழிமால்யானையார்தொழுகழற்றயரதன்
பாழியாலுலகெலாமொருவழிப்படரவாழ்
ஆழியான்மைந்தர்பேரறிவினாரழகினார்
ஊழியாரெளிதினிற்கரசுதந்துதவுவார். (௪)

நீதியார்கருணையின்னெறியினார்நெறிவயிற்
பேதியாநிலைமையாரெவரினும்பெருமையார்
போதியாதளவிலாவுணர்வினார்புகழினார்
காதிசேய்தருகடற்கடவுள்வெம்படையினார். (௫)

வேலிகற்சினவுதாடகைவிளிந்துருளவிற்
கோலியக்கொடுமையாள்புதல்வரைக்கொன்றுதன்
காலியற்பொடியினானெடியகற்படிவமாம்
ஆலிகைக்கரியபேருருவளித்தருளினான். (௬)

நல்லுறுப்பமையுநம்பியரின்முன்பவனயந்
தெல்லுறுப்பரியபேரெழுசுடர்க்கடவுடன்
பல்லிறுத்தவன்வலிக்கமைதியம்பகமெனும்
வில்லிறுத்தருளினான்மிதிலைபுக்கனையநாள். (௭)

உளைவயப்புரவியானுதவவுற்றொருசொலால்
அளவில்கற்புடையசிற்றவைபணித்தருளலால்
வளையுடைப்புணரிசூழ்மகிதலத்திருவெலாம்
இளையவற்குதவியித்தலையெழுந்தருளினான். (௮)

தெவ்விராவகைநெடுஞ்சிகைவிராமழுவினான்
அவ்விராமனையுமாவலிதொலைத்தருளினான்
இவ்விராகவன்வெகுண்டெழுமிராவனையனும்
வெவ்விராதனையிராவகைதுடைத்தருளினான். (௯)

கரன்முதற்கருணையற்றவர்கடற்படையொடும்
சிரமுகச்சிலைகுனித்துதவுவார்திசையுளார்
பரமுகப்பகைதுமித்தருளுவார்பரமராம்
அரன்முதற்றலைவருக்கதிசயத்திறலினார். (௧௦)

ஆயமானாகர்தாழாழியானேயலால்
காயமானாயினான்யாவனேகாவலா
நீயமானோர்தியானேருமாரீசனார்
மாயமானாயினான்மாயமானாயினான். (௧௧)

உக்கவந்தமுமுடற்பகைதுறந்துயர்பதம்
புக்கவந்தமுநமக்குரைசெயும்புரையவோ
திக்கவந்தரநெடுந்திரள்கரஞ்சினவுதோள்
அக்கவந்தனுநினைந்தமரர்தாழ்சவரிபோல். (௧௨)

முனிவரும்பிறருமேன்முடிவரும்பகலெலாம்
இனையர்வந்துறுவரென்றியறவம்புரிகுவார்
வினையெனுஞ்சிறைதுறந்துயர்பதம்விரவினார்
எனையரென்றுரைசெய்கேனிரவிதன்சிறுவனே. (கங)

மாயையான்மதியிலாநிருதர்கோன்மனைவியைத்
தீயகானெறியினுய்த்தனனவட்டேடுவார்
நீயையாதவமிழைத்துடைமையானெடுமெனம்
தூயையாவுடைமையாலுறவினைத்துணிகுவார். (கச)

தந்திருந்தனரருட்டகைநெடும்பகைஞரும்
இந்திரன்சிறுவனுக்கிறுதியின்றிசைதரும்
புந்தியின்பெருமையாய்போதரென்றுரைசெய்தான்
மந்திரங்கெழுமுநூன்மரபுணர்ந்துதவுவான். (கரு)

அன்னவாமுரையெலாமறிவினாலுணர்குவான்
உன்னையேயிடையவெற்கரியதெப்பொருளரோ
பொன்னையேபொருவுவாய்போதெனப்போதுவான்
தன்னையேயனையவன்சரணம்வந்தணுகினான். (கசு)

வேறு. கண்டனனென்பமன்னோகதிரவன்சிறுவன்காமர்
குண்டலந்துறந்தகோலவதனமுங்குளிர்க்குங்கண்ணும்
புண்டரீகங்கள்பூத்துப்புயறழீஇப்பொலிந்ததிங்கள்
மண்டலமுதயஞ்செய்தமரகதக்கிரியனானை. (கஎ)

நோக்கினானெடிதுநின்றானெடிவருங்கமலத்தண்ணல்
ஆக்கியவுலகமெல்லாமன்றுதொட்டின்றுகாறும்
பாக்கியம்புரிந்தவெல்லாங்குவிந்திருபடிவமாகி
மேக்குயர்தடந்தோள்பெற்றுவீரராய்விளைந்தவென்பான். (கஅ)

தேறினனமரர்க்கெல்லாந்தேவராந்தேவரன்றே
மாறியிப்பிறப்பில்வந்தார்மானுடராகிமன்னோ
ஆறுகொள்சடிலத்தானுமயனுமென்றிவர்களாதி
வேறுளகுழுவையெல்லாமானுடம்வென்றதன்றே. (கக)

எனநினைந்தினையவெண்ணியிவர்கின்றகாதலோதக்
கனைகடற்கரைநின்றேறக்கண்ணிணைகளிப்பநோக்கி
அனகனைக்குறுகினானவ்வண்ணலுமருத்திகூரப்
புனைமலர்த்தடக்கைநீட்டிப்போந்தினிதிருத்தியென்றான். (உ0)

தவாவலியரக்கரென்னுந்தகாவிருட்பகையைத்தள்ளிக்
குவாலறநிறுத்தற்கேற்றகாலத்தின்கூட்டமொத்தார்
அவாமுதலறுத்தசிந்தையநகனுமரியின்வேந்தும்
உவாவுறவந்துகூடுமுடபதியிரவியொத்தார். (உக)

கூட்டமொத்திருந்தவீரர்குறித்ததோர்பொருட்குமுன்னாள்
ஈட்டியதவமும்பின்னர்முயற்சியுமியைந்ததொத்தார்
மீட்டும்வாளரக்கரென்னுந்தீவினைவேரின்வாங்கக்
கேட்டுணர்கல்வியோடுஞானமுங்கிடைத்ததொத்தார். (௨௨)

ஆயதோரவதியின்கணருக்கன்சேயரசைநோக்கித்
தீய்வினைதீயநோற்றாரென்னின்யார்செல்வநின்னை
நாயகமுலகுக்கெல்லாமென்னலாநலமிக்கோயை
மேயினன்விதியேநல்கின்மேவலாகாதென்னென்றான். (௨௩)

மய்யறுதவத்தின்வந்தசவரியிம்மலையினீவந்
தெய்தினையிருந்ததன்மையியம்பினள்யாங்களுற்ற
கய்யறுதுயரநின்னாற்கடப்பதுகருதிவந்தேம்
அய்யநிற்றீருமென்னவரிகுலத்தரசன்சொல்வான். (௨௪)

முரணுடைத்தடக்கையோச்சிமுன்னவன்பின்வந்தேனை
இருணிலைப்புறத்தின்காறுமுலகெங்குந்தொடரவிக்குன்
றரணுடைத்தாகியுய்ந்தேனாருயிர்துறக்கலாற்றேன்
சரணுனைப்புகுந்தேனென்னைத்தாங்குதறருமமென்றான். (௨௫)

என்றவக்குரக்குவேந்தையிராமனுமிரங்கிநோக்கி
உன்றனக்குரியவின்பதுன்பங்களுள்ளமுன்னாள்
சென்றனபோக்கிமேல்வந்துறுவனதீர்ப்பலன்ன
நின்றனவெனக்குநிற்குநேரெனமொழியுநேரா. (௨௬)

மற்றினியுரைப்பதென்னேவானிடைமண்ணினின்னைச்
செற்றவரென்னைச்செற்றார்தீயரேயெனினுமுன்னோ
டுற்றவரெனக்குமுற்றாருன்கிளையெனதென்காதற்
சுற்றமுன்சுற்றநீயேயின்னுயிர்த்துணைவனென்றான். (௨௭)

ஆர்த்ததுகுரக்குச்சேனையஞ்சனைச்சிறுவன்மேனி
போர்த்தனபொடித்தரோமப்புளகங்கள்பூவின்மாரி
தூர்த்தனர்விண்ணோர்மேகஞ்சொரிந்தனவநகன்சொன்ன
வார்த்தையெக்குலத்துளோர்க்குமறையினுமெய்யென்றுன்னா (௨௮)

ஆண்டெழுந்தடியிற்றாழ்ந்தவஞ்சனைச்சிங்கம்வாழி
தூண்டிரட்டடந்தோண்மைந்ததோழனுநீயும்வாழி
ஈண்டுநுங்கோயிலெய்தியினிதினிருக்கைகாண
வேண்டுநும்மருளென்னென்றான்வீரனும்விழுமிதென்றான். (௨௯)

ஏகினனிரவிசேயுமிருவருமரிகளேறும்
ஊகவெஞ்சேனைசூழவறந்தொடர்ந்துவந்துவாழ்த்த
நாகமுநரந்தக்காவுநளினவாவிகளுநண்ணிப்
போகபூமியையுமேசும்புதுமலர்ச்சோலைபுக்கார். (௩௦)

ஆரமுமகிலுந்துன்றியவிர்பளிக்கறையளாவி
நாரநின்றனபோற்றேன்றிநவமலர்த்தடங்கணும்
பாரமுமருங்குந்தெய்வத்தருவுநீர்ப்பண்ணையாடும்
சூரரமகளிருசறுவன்றியசும்மைத்தன்றே. (நக)

வேறு. அயர்வில்கேள்விசாலறிஞர்வேலைமுன்
பயில்வில்கல்வியார்பொலிவில்பான்மைபோல்
குயிலுமாமணிக்குழுவுசோதியால்
வெயிலும்வெள்ளிவெண்மதியும்மேம்படா. (நஉ)

ஏயவன்னதாமினியசோலைவாய்
மேயமைந்தருங்கவியின்வேந்தனும்
தூயபூவணைபொலிந்துதோன்றினர்
ஆயவன்பினேடளவளாவுவார். (நந)

கனியுங்கந்தமுங்காயுந்தூயநன்
கினியயாவையுங்கொணரயாரினும்
புனிதன்மஞ்சனத்தொழில்புரிந்துபின்
இனிதிருந்துநல்விருந்துமாயினன். (நச)

விருந்துமாகியம்மெய்ம்மையன்பினே
டிருந்துநோக்கிநின்றிறைவன்சிந்தியாப்
பொருந்துநன்மனைக்குரியபூவையைப்
பிரிந்துளாய்கொலோநீயும்பின்னென்றான். (நரு)

என்றவேலையினெழுந்துமாருதி
குன்றுபோலநின்றிருகைகூப்பினன்
நின்றநீதியாய்நெடிதுகேட்டியால்
ஒன்றுநானுனக்குரைப்பதுண்டெனு. (நசு)

நாலுவேதமாநவையிலார்கலி
வேலியன்னதோர்மலையின்மேலுளான்
சூலிதன்னருட்டுறையின்முற்றினன்
வாலியென்றுளான்வரம்பிலாற்றலான். (நஎ)

கழறுதேவரோடவுணர்கண்ணினின்
றுழலுமந்தரத்துருவுதேயமுன்
அழலுங்கோளராவகடுதேய்விடச்
சுழலும்வேலையைக்கடையுந்தோளினன். (நஅ)

நிலனுநீருமாய்நெருப்புங்காற்றுமென்
றுலவில்பூதநான்குடையவாற்றலான்
அலையின்வேலைசூழ்கிடந்தவாழிமா
மலையினின்றுமிம்மலையின்வாவுவான். (நகூ)

கிட்டினூர்பொரக்கிடைக்கினன்னவர்
பட்டநல்வரம்பாகமெய் துவான்
எட்டுமோதிரத்திருதிநாளுமுற்
றட்டமூர்த்திதாள்பணியுமாற்றலான். (சo)

கால்செலாதவன்முன்னர்க்கந்தவேள்
வேல்செலாதவன்மார்பின்வென்றியான்
வால்செலாதவாயலதிராவணன்
கோல்செலாதவன்குடைசெலாதரோ. (சக)

மேருவேமுதற்கிரிகள்வேரொடும்
பேருமேயவன்பேருமேனெடும்
காரும்வானமுங்கதிருநாகமும்
தூருமேயவன்பெரியதோள்களால். (சஉ)

பார்கிடந்தவெம்பன்றிபண்டைநாள்
நீர்கடைந்தபேராமைநேருள்ளான்
மார்பிடந்தமாவெனினுமற்றவன்
தார்கிடந்ததோடகையவல்லவோ. (சஙா)

படர்ந்தநீணெடுந்தலைபரப்பிமீ
தடர்ந்துபாரம்வந் துறவநந்தனும்
கிடந்துதாங்குமிக்கிரியைமேயினுன்
நடந்துதாங்குமிப்புவனநாளெலாம். (சச)

கடலுளைப்பதுங்கால்சலிப்பதும்
மிடலருக்கர்தேர்மீதுசெல்வதும்
தொடரமற்றவன்சுழியினெற்றலான்
அடலின்வெற்றியாயயலினுவவோ. (சரு)

வெள்ளமேழுபத்துளதுமேருவைத்
தள்ளலானதோளரிகடானையான்
உள்ளமின்றியவ்வுயிரையஞ்சலால்
வள்ளலேயவன்வாழவாழுமால். (சசு)

மழையிடிப்புருவயவெஞ்சியமா
முழையிடிப்புருமுரண்வெங்காலுமென்
றழைதுடிப்புருச்சார்வுருதவன்
விழைவிடத்தின்மேல்விளிவையஞ்சலால். (சஎ)

மெய்க்கொள்வாலினன்மிடலிராவணன்
தொக்கதோளுறத்தொடர்படுத்தநாள்
புக்கிலாதவெம்பொழியரத்தநீர்
உக்கிலாதவேறுலகம்யாவதோ. (சஅ)

இந்திரன்றனிப்புதல்வனின்னளிச்
சந்திரன்றழைத்தனையதன்மையான்
அந்தகன்றனக்கரியவாணையான்
முந்திவந்தனனிவனின்மொய்ம்பினுய். (சகூ)

அன்னவன்னெமக்கரசனுகவே
பின்னவன்னிளம்பதமியற்றுநாள்
முன்னவன்குலப்பகைஞன்முட்டினுன்
மின்னெயிற்றுவாளவுணன்மேன்மையான். (ருO)

முட்டிநின்றவன்முரணுரத்தினேர்
ஒட்டவஞ்சிநெஞ்சலையவோடினுன்
வட்டமண்டலத்தரிதுவாழ்வெனு
எட்டரும்பெரும்பிலனுளெய்தினுன். (ருக)

எய்துகாலையப்பிலனுளெய்தியான்
நொய்தினங்கவற்கொணர்வெனேன்மையாய்
செய்திகாவனீசிறிதுபோழ்தெனு
வெய்தினெய்தினுன்வெகுளிமேயினுன். (ருஉ)

ஏகிவாலியுமிருதுவேழொடேழ்
வேகவெம்பிலந்தடவிவெம்மையான்
மோகவென்றிமேன்முயல்பின்வைகிடச்
சோகமெய்தினன்றுணைதுளங்கினுன். (ருங)

அழுதழுங்குறுமிவனையன்பினில்
தொழுதிறந்துநின்றெழிலிதாதலால்
எழுதுவென்றியாயரசுசெய்கெனப்
பழுதிதென்றனன்பரியுநெஞ்சினுன். (ருச)

என்றுதானுமவ்வழியிரும்பிலம்
சென்றுமுன்னவற்றேடுவேனவற்
கொன்றுளான்றனைக்கொலவொணுதெனிற்
பொன்றுவேனெனுப்புகுதன்மேயினுன். (ருரு)

தடுத்துவல்லவர்தணிவுசெய்துநோய்
எடுத்தவேலையோரியைவினுலியைத்
தடுத்தகாவலுமரிகளாணையால்
கொடுத்ததுண்டிவன்கொண்டனன்கொலாம். (ருசு)

அன்னநாளின்மாயாவியப்பிலத்
தின்னவாயினூடெய்துமென்னயாம்
பொன்னின்மால்வரைப்பொருப்பொழித்துவே
றுன்னுருன்றெலாமுடனடுக்கினேம். (ருஎ)

சேமமவ்வழிச்செய்துசெங்கதிர்க்
கோமகன்றனைக்கொண்டுவந்தியாம்
மேவுகுன்றின்மேல்வைகும்வேலைவாய்
ஆவியுண்டனனவனையன்னவன். (௫௮)

ஒளித்தவன்னுயிர்க்கள்ளையுண்டுளம்
களித்தவாலியுங்கடிதினெய்தினான்
விளித்துநின்றுவேறுரைபெறானிருந்
தளித்தவாறுநன்றிளவலாரெனா. (௫௯)

வால்விசைத்துவான்வளிநிமிர்ந்தெனக்
கால்விசைத்தவன்கடிதினெற்றலும்
நீணிறத்துவிண்ணெடுமுகட்டவும்
வேலைபுக்கவும்பெரியவெற்பெலாம் (௬0)

ஏறினானவனெவருமஞ்சுறச்
சீறினானெடுஞ்சிகரமெய்தினான்
வேறிலாதவன்புதல்வமெய்ம்மையால்
ஆறினானும்வந்தடிவணங்கினான். (௬௧)

வணங்கியண்ணநின்வரவிலாமையான்
உணங்கியுன்வழிப்படரவுன்னுவேற்
கிணங்கரின்மையாலிறைவனும்முடைக்
கணங்கள்காவலுன்கடன்மையென்றனர். (௬௨)

ஆணையஞ்சியிவ்வரசையெய்திவாழ்
நாணிலாதவென்னவையைநன்குவாய்
பூணுலாவுதோளினைபொறாயெனக்
கோணினானெடுங்கொடுமைகூறினான். (௬௩)

அடர்கடந்ததோளவனையஞ்சிவெங்
குடர்கலங்கியெங்குலமொடுங்கமுன்
கடர்கடைந்தவெங்கரதலங்களால்
உடர்கடைந்தனனிவனுலைந்தனன். (௬௪)

இவனுலைந்துலைந்தெழுகடற்புறத்
தவனியுங்கடந்தெயிலடைந்தனன்
கவனமொன்றிலான்கால்கடாயென
அவனிவேலையேழரியின்வாவினான். (௬௫)

என்றுகான்மகனியம்பவீசனும்
நன்றுநன்றெனாநனிதொடர்ந்துபின்
சென்றவாலிமுன்சென்றசெம்மறான்
அன்றுவாவுதற்கறிந்தனன்கொலாம். (௬௬)

இனையவாவியந்திள்வறன்னெடும்
வனையும்வார்கழற்கருணைவள்ளல்பின்
பினையவீரர்செய்தமையியம்பெனப்
புனையும்வாகையான்புகறன்மேயினான். (சுஎ)

நக்கரக்கடற்புறத் தூநண்ணுநாள்
செக்கர்மெய்த்தனிச்சோதிசேர்கலாச்
சக்கரப்பொருப்பிற்றலைக்குமப்
பக்கமுற்றவன்கடிதுபற்றினான். (சுஅ)

பற்றியஞ்சலன்பழியின்வெஞ்சினம்
முற்றிநின்றதன்முரண்வலிக்கையால்
எற்றுவானெடுத்தெழுதலும்பிழைத்
தற்றமொன்றுபெற்றிவனகன்றனன். (சுக)

எந்தைமற்றவனெயிறதுக்குமேல்
அந்தகற்குமோரரணுமில்லையால்
இந்தவெற்பின்வந்திவனிருந்தனன்
முந்தையுற்றதோர்சாபமுண்மையால். (எ0)

உரிமையென்றிவற்குரியதாரமாம்
அருமருந்தையுமவன்விரும்பினான்
இருமையுந்துறந்திவனிருந்தனன்
கருமமிங்கிதேகடவுளென்றனன். (எக)

வேறு. பொய்யிலாதவன்வரன்முறையிம்மொழிபுகல
அய்யனுயிரம்பெயருடையமலர்க்குமமலன்
வய்யநுங்கியவாயிதழ்துடித்ததுமலர்க்கண்
செய்யதாமரையாம்பலம்போதெனச்சிவந்த. (எஉ)

ஈரநீங்கியசிற்றவைசொற்றனளென்ன
ஆரம்வீங்குதோட்டம்பிக்குத்தன்னரசுரிமைப்
பாரமீந்தவன்பரிவிலனொருவன்றனிளையோன்
தாரம்வெளவினனென்றசொற்றரிக்குமாறுளதோ. (எஙு)

உலகமேழினோடேழும்வந்தவனுயிர்க்குதவி
விலகுமென்னினும்வில்லுடைவாளியின்வீட்டித்
தலைமையோடுநின்றாரமுமுனக்கின்றுதருவேன்
புலமையோயவனுறைவிடங்காட்டென்றுபுகன்றான். (எசு)

எழுந்துபேருவகைக்கடற்பெருந்திரையிரைப்ப
அழுந்துதுன்பத்துக்கக்கரைகண்டனனனையான்
விழுந்ததேயினிவாலிதன்வலியெனவிரும்பா
மொழிந்தவீரற்கியாமெண்ணுவதுண்டெனமொழிந்தான். (எடு)

அனையவாண்டுரைத்தநுமனேமுதலியவமைச்சர்
நினைவுங்கல்வியுநீதியுஞ்சூழ்ச்சியுநிறைந்தார்
எனையரன்னவரோடும்வேறிருந்தனனிரவி
தனையனவ்வழிச்சமீரணன்மகனுரைதருவான். (எசு)

உன்னினேனினதுள்ளத்தினுள்ளதையுரவோய்
அன்னவாலியைக்காலனுக்களிப்பதோராற்றல்
இன்னவீரர்பாலில்லையென்றயிர்த்தனையினியான்
சொன்னகேட்டவைகடைப்பிடிப்பாயெனச்சொன்னான். (எஎ)

சங்குசக்கரக்குறியுளதடக்கையிற்றாளில்
எங்குமித்தனையிலக்கணம்யாவர்க்குமில்லை
செங்கண்விற்கரத்திராமனத்திருநெடுமாலே
இங்குதித்தனனீண்டறநிறுத்துதற்கின்னும். (எஅ)

செறுக்கும்வன்றிறற்றிரிபுரந்தீயெழச்சினவிக்
கறுக்கும்வெஞ்சினக்காலன்றன்காலமுங்காலால்
அறுக்கும்புங்கவனுண்டபேராடகத்தனிவில்
இறுக்குந்தன்மையம்மாயவற்கன்றியுமெளிதோ. (எகூ)

என்னையீன்றவனிவ்வுலகியாவையுமீன்றான்
தன்னையீன்றவற்கடிமைசெய்தவமஃதையா
உன்னையீன்றவற்குறுபதமுளதெனவுரைத்தான்
இன்னதோன்றலேயவனிதற்கேதுவுண்டிறையோய். (அ0)

துன்புதோன்றியபொழுதுடன்றோன்றுவனெவர்க்கும்
முன்புதோன்றலையறிதற்குமுடிவெனென்றியம்ப
அன்புசான்றெனவுரைத்தனனையவென்யாக்கை
என்புதோன்றலவுருகினவெனிற்பிறிதெவனோ. (அக)

பிறிதுமன்னவன்பெருவலியாற்றலைப்பெரியோய்
அறிதியென்னினுண்டுபாயமுமஃதருமரங்கள்
நெறியினின்றனவேழினொன்றுருவவிந்நெடியோன்
பொறிகொள்வெஞ்சரம்போவதுகாணெனப்புகன்றான். (அ௨)

நன்றுநன்றெனாநன்னெடுங்குன்றமுநாணும்
தன்றுணைத்தனிமாருதித்தோளிணைதழுவிச்
சென்றுசெம்மலைக்குறுகியான்செப்புவதுளதால்
ஒன்றுனக்கெனவிராமனுமுரைத்தியஃதென்றான். (அ௩)

ஏகவேண்டுமிந்நெறியெனவினிதுகொண்டேகி
மாகநீண்டனகுறுகிடநிமிர்ந்தனமரங்கள்
ஆகவைந்தினோடிரண்டினொன்றுருவநின்னம்பு
போகவேயென்றன்மனத்திடர்போமெனப்புகன்றான். (அ௪)

மறவிலானதுகூறலும்வானவர்க்கிறைவன்
முறுவல்செய்தவன்முன்னியமுயற்சியையுன்னி
எறுழ்வலித்தடந்தோள்களாற்சிலையைநாணேற்றி
அறிவினாலளப்பரியவற்றருகுசென்றணைந்தான். (௮௫)

நட்புக்கோட்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம். ௧௬௬

## ௪-ஆவது. மராமரப்படலம்

ஊழிபேரினும்பேர்விலவுலகங்களுலைந்து
தாழுங்காலத்துந்தாழ்விலதயங்குபேரிருள்சூழ்
ஆழிமாநிலந்தாங்கியவரும்பெருங்கிரிகள்
ஏழுமாண்டுசென்றொருவழிநின்றெனவியைந்த. (௧)

கலைகொண்டோங்கியமதியமுங்கதிரவன்றானும்
தலைகண்டோடுதற்கருந்தவந்தொடங்குறுஞ்சாரல்
மலைகண்டோமென்பதல்லதுமலர்மிசையயற்கும்
இலைகண்டோமெனத்தெரிப்பருந்தரத்தனவேழும். (௨)

ஒக்கநாளெலாமுழல்வனவுலைவிலவாக
மிக்கதோர்பொருளுளதெனவேறுகண்டிலமால்
திக்கும்வானமுஞ்செறிந்தவத்தருநிழற்சீதம்
புக்குநீங்கலிற்றளர்விலவிரவிதேர்ப்புரவி. (௩)

நீடுநாள்களுங்கோள்களுமென்னமேனிமிர்ந்து
மாடுதோற்றுவமலரெனப்பொலிகின்றவனப்ப
ஓடுமாச்சுடர்வெண்மதிக்குட்கறுப்புயர்ந்த
கோடுதேய்த்தலிற்களங்கமுற்றுமன்னகுறிய. (௪)

தீதரும்பெருஞ்சாகைகடழைக்கின்றசெயலால்
வேதமென்னவுந்தகுவனவிசும்பினுமுயர்ந்த
ஆதியண்டமுன்பளித்தவனுலகினுங்கவனூர்
ஓதிமந்தனிப்பெடையொடும்புடையிருந்துறைவ. (௫)

நாற்றமல்குபோதடைகனிகாய்முதலனை
வீற்றுமண்டலத்தியாவையும்வீழ்கிலயாண்டும்
காற்றலம்பினுங்கலிநெடுவானிடைக்கலந்த
ஆற்றின்வீழ்ந்துபோயலைகடற்பாய்தருமியல்ப. (௬)

அடியநான்மறையந்தணனண்டத்துக்கப்பால்
முடியின்மேற்சென்றமுடியனவாதலின்முடியா
நெடியமாலெனுநிலையனநீரிடைக்கிடந்த
படியின்மேனின்றமேருமால்வரையினும்பழைய. (௭)

வள்ளலிந்திரன்மைந்தற்குந்தம்பிக்கும்வயிர்த்த
உள்ளமேயெனவொன்றினென்றுள்வயிர்ப்புடைய
தெள்ளுநீரிடைக்கிடந்தபார்சுமக்கின்றசேடன்
வெள்ளிவெண்படங்குடைந்துகீழ்போகியவேர. (௮)

சென்றுதிக்கினையளந்தனபணைகளிற்றேவர்
என்றுநிற்குமென்றிசைப்பனவிருசுடர்திரியும்
குன்றினுக்குயர்ந்தகன்றனவொன்றினுங்குறுகா
ஒன்றினுக்கொன்றினிடைநெடிதியோசனையுடைய. (௯)

ஆயமாமரமனைத்தையுநோக்கிநின்றமலன்
தூயவார்கணைதுரப்பதோராதரந்தோன்றச்
சேயவானமுந்திசைகளுஞ்செவிடுறத்தேவர்க்
கேய்விலாததோர்பயம்வரச்சிலையைநாணெறிந்தான். (௧௦)

ஒக்கநின்றதெவ்வுலகமுமங்கங்கேயோசை
பக்கநின்றவர்க்குற்றதுபகர்வதெப்படியோ
திக்கயங்களுமயங்கினதிசைகளுந்திகைத்த
புக்கயன்பதிசலிப்புறவொலித்ததப்பொருவில். (௧௧)

அரிந்தமன்சிலைநாணெடிதார்த்தலுமமரர்
இரிந்துநீங்கினர்கற்பத்தினிறுதியென்றயிர்த்தார்
பரிந்ததம்பியேபாங்குநின்றான்மற்றைப்பல்லோர்
புரிந்ததன்மையையுரைசெயிற்பழியவற்புணரும். (௧௨)

எய்தல்காண்டுங்கொலின்னமென்றரிதின்வந்தெய்திப்
பொய்யின்மாருதிமுதலினோர்புகழ்வுறும்பொழுதில்
மொய்கொள்வார்சிலைநாணினைமுறையுறவாங்கி
வெய்யவாளியையாளுடைவில்லியும்விட்டான். (௧௩)

ஏழுமாமரமுருவிக்கீழுலகமென்றிசைக்கும்
ஏழுமூடுபுக்குருவிப்பின்னுடனடுத்தியன்ற
ஏழிலாமையான்மீண்டதவ்விராகவன்பகழி
ஏழுகண்டபினுருவுமாலொழிவதன்றின்னும். (௧௪)

ஏழுவேலையுமுலகமேலுயர்ந்தனவேழும்
ஏழுகுன்றமுமிருடிகளேழுவரும்புரவி
ஏழுமங்கையரெழுவருநடுங்கினவென்ப
ஏழுபெற்றதோவிக்கணைக்கிலக்கமென்றெண்ணி. (௧௫)

அன்னதாயினுமறத்தினுக்காருயிர்த்துணைவன்
என்னுந்தன்மையைநோக்கினர்யாவருமெவையும்
பொன்னின்வார்கழற்புதுநிறத்தாமரைபூண்டு
சென்னிமேற்கொளுஉவருக்கன்சேயிவையிவைசெப்பும். (௧௬)

வேறு. வய்யநீவானுநீமற்றுநீமலரின்மேல்
அய்யனீயாழிநீயாழிவாழமலனீ
செய்யதீவினைதெறுந்தேவுநீநாயினேன்
உய்யவந்துதவினையுலகமூந்துதவினய். (கஎ)

என்னெனக்கரியதெப்பொருளுமெற்கெளிதலால்
உன்னையித்தலைவிடுத்துதவினார்விதியினர்
அன்னையொப்புடையவுன்னடியருக்கடியன்யான்
மன்னவர்க்கரசவென்றுரைசெய்தான்வசையிலான். (கஅ)

ஆடினார்பாடினாரங்குமிங்குங்கலந்
தோடினாருவகையின்னறவையுண்டுணர்கிலார்
நேடிநாம்வாலிகாலனையெனநெடிதுநாள்
வாடினார்தோளெலாம்வளரமற்றவரெலாம். (க௯)

அண்டமும்மகிலமும்மடையவன்றனலிடைப்
பண்டுவெந்தனநெடும்புசைவறந்திடினும்வான்
மண்டலந்தொடுவதம்மலையின்மேன்மலையெனக்
கண்டனன்றுந்துபிக்கடலனனுடலரோ. (உ0)

தென்புலக்கிழவனூர்மகிடமோதிசையின்வாழ்
வன்புலக்கரிமடிந்ததுகொலோமகரநீர்
என்புலப்புறவுலர்ந்ததுகொலோவிதுவென
அன்புலப்பரியநீயுரைசெயாயெனவவன். (உக)

மராமரப்படலம் முற்றிற்று. ஆ௳ திருவிருத்தம்-கஅஎ.

## ரு-ஆவது. துந்துபிப்படலம்.

துந்துபிப்பெயருடைச்சுடுசினத்தவுணன்மீ
திந்துவைத்தொடநிமிர்ந்தெழுமருப்பிணையினன்
மந்தரக்கிரியெனப்பெரியவன்மகரநீர்
சிந்திடக்கருநிறத்தரியினைத்தேடுவான். (க)

அங்குவந்தரியெதிர்ந்தமைதியென்னென்றலும்
பொங்குவெஞ்செருவினிற்பொருதியென்றுரைசெயக்
கங்கையின்கணவனக்கறைமிடற்றிறைவனே
உங்கள்வெங்கதவலிக்கொருவனென்றுரைசெய்தான். (உ)

கடிதுசென்றவனுமக்கடவுடன்கைலையைக்
கொடியகொம்பினின்மடுத்தெழுதலுங்குறுகிமுன்
நொடிதிநின்குறையெனென்றலுநுவன்றனனரோ
முடிவில்வெஞ்செருவெனக்கருள்செய்வான்முயல்கென. (௩)

மூலமேவீரமேமூடினாயோடுபோர்
ஏலுமேதேவர்பாலேகெனாவேவினான்
சாலநாள்போர்செய்வாயாதியேற்சாரல்போர்
வாலிபாலேகெனாவானுளோர்வானுளான். (ச)

அன்னவன்விடவுவந்தவனுவந்தரிகடம்
மன்னவண்வருகபோர்செய்கெனாமலையினைச்
சின்னபின்னம்படுத்தெய்தலுஞ்சினவியென்
முன்னவன்முன்னர்வந்தனையவன்முனைதலும். (ரு)

இருவருந்திரிவுறும்பொழுதினின்னவர்களென்
றொருவருஞ்சிறிதுணர்ந்திலர்களெவ்வுலகினும்
வெருவருந்தகைவிலார்விழுவர்நின்றெழுவரால்
மருவருந்தகையர்தானவர்கள்வானவர்கடாம். (சு)

தீயெழுந்ததுவிசும்புறநெடுந்திசையெலாம்
போயெழுந்ததுமுழக்குடனெழுந்ததுபுகை
தோயநன்புணரியுஞ்சுடர்தடங்கிரிகளும்
சாயழிந்தனவடித்தலமெடுத்திடுதலால். (எ)

புயலும்வானகமுமப்புணரியும்புணரிசூழ்
அயலும்வீழ்தூளியாலறிவருந்தகையவாம்
மயனின்மாமகனும்வாலியுமறத்திடலினார்
இயலுமாமதியமீராறும்வந்தெய்தவே. (அ)

அற்றதாகியசெருப்புரிவுறும்மளவினில்
கொற்றவாலியுமவன்குவவுதோள்வலியொடும்
பற்றியானையினெடும்பணைமருப்பிணைபறித்
தெற்றினானவனும்வானிடியினின்றுரறினான். (க)

தலையின்மேலடிபடக்கடிதுசாய்நெடிதுதாள்
உலையவாய்முழைதிறந்துதிரவாறொழுகமா
மலையின்மேலுருமிடித்தென்னவான்மண்ணொடும்
குலையமாதிசைகளுஞ்செவிடுறக்குத்தினான். (க0)

கவரியிங்கிதுவெனக்கரதலங்கொடுதிரித்
திவர்தலுங்குருதிபட்டிசைதொறுந்திசைதொறும்
துவரணிந்தனவெனப்பொசிதுதைந்தனதுணைப்
பவர்நெடும்பணைமதப்பகையின்வன்கரிகளே. (கக)

புயல்கடந்திரவிதன்புகல்கடந்தயலுளோர்
இயலுமண்டிலமிகந்தெனையவுந்தவிரமேல்
வயிரவன்கரதலத்தவன்வலித்தெறியவன்
றுயிரும்விண்படரவிவ்வுடலுமிப்பரிசரோ. (கஉ)

முட்டிவான்மூகடுசென்றளவியிம்முடையுடற்
கட்டிமால்வரையைவந்துறுதலுங்கருணையான்
இட்டசாபமுமெனக்குதவுமிவ்வியல்பினில்
பட்டவாமுழுவதும்பரிவினுலுரைசெய்தான். (கங)

வேறு. கேட்டனனமலனுங்கிளந்தவாறெலாம்
வாட்டொழிலிளவலையிதனைமைந்தநீ
ஓட்டெனவவன்கழல்விரலினுந்தினன்
மீட்டதுவிரிஞ்சனுமுற்றுமீண்டதே. (கச)

ஆயிடையரிக்குலமசனியஞ்சுற
வாய்திறந்தார்த்ததுவள்ளலோங்கிய
தூயநற்சோலையிலிருந்தசூழல்வாய்
நாயகவுணர்த்துவதுண்டோனெனு. (கரு)

துந்துபிப்படலம் முற்றிற்று. ஆ திருவிருத்தம் - உ0உ.

## சு-ஆவது. கலன்காண்படலம்.

இவ்வழியாமியைந்திருந்ததோரிடை
வெவ்வழியிராவணன்கொணரமேலைநாள்
செவ்வழிநோக்கினின்றேவியேகொலாம்
கவ்வையினரற்றினள்கழிந்தசேணுளாள். (க)

உழையரினுணர்த்துவதுளதென்றுன்னியோ
குழைபொருகண்ணினுள்குறித்ததோர்ந்திலம்
மழைபொருகண்ணிணைவாரியோடுதன்
இழைபொதிந்திட்டனள்யாங்களேற்றனம். (உ)

வய்த்தனமிவ்வழிவள்ளனின்வயின்
உய்த்தனதந்தபோதுணர்தியாலெனுக்
கய்த்தலத்தன்னவைகொணர்ந்துகாட்டினன்
நெய்த்தலைப்பால்கலந்தனையநேயத்தான். (ங)

தெரிவுறநோக்கினன்றெரிவைமெய்யணி
எரிகனலெய்தியமெழுகின்யாக்கைபோல்
உருகினனென்கிலமுயிருக்கூற்றமாய்ப்
பருகினனென்கிலம்பகர்வதென்கொலாம். (ச)

நல்குவதென்னினிநங்கைகொங்கையைப்
புல்கியபூணுமக்கொங்கைபோன்றன
அல்குலினணிகளுமல்குலாயின
பல்கலன்பிறவுமப்படிவமானவே. (ரு)

விட்டபேருணர்வினைவிளிந்தவென்கெனோ
அட்டனவுயிரையவ்வணிகளென்கெனோ
கொட்டினசாந்தெனக்குளிர்ந்தவென்கெனோ
சுட்டனவென்கெனோயாதுசொல்லுகேன். (௬)

மோந்திடநறுமலரானமொம்பினின்
ஏந்திடவுத்தரியத்தையேய்ந்தன
சாந்தமுமாயொளிதழுவப்போர்த்தலால்
பூந்துகிலாயவப்பூவைபூண்களே. (௭)

ஈர்த்தனசெங்கணீர்வெள்ளம்யாவையும்
போர்த்தனமயிர்ப்புறம்புளகம்பொங்குதோள்
வேர்த்தனவென்கெனோவெதும்பினுனென்கோ
தீர்த்தனையவ்வழியாதுசெப்புகேன். (௮)

விடங்கரந்தனையதோர்வெம்மைமீக்கொள
நெடும்பொழுதுணர்வினோடுயிர்ப்புநீங்கிய
தடம்பெருங்கண்ணனைத்தாங்கினுன்றன
துடம்பினிற்செறிமயிர்சுறுக்கென்றேறவே. (௯)

தாங்கினனிருத்தியத்துயரந்தாங்கலா
தேங்கியநெஞ்சினனிரங்கிவிம்முவான்
வீங்கியதோளினுய்வினையினேனுயிர்
வாங்கினெனிவ்வணிவருவித்தேனெனு. (௧0)

அயனுடையண்டத்தினப்புறத்தையும்
மயர்வறநாடியென்வலியுங்காட்டியுன்
உயர்புகழ்த்தேவியையுதவற்பாலனுல்
துயருழன்றயர்தியோசுருதிநூல்வலாய். (௧௧)

திருமகளனையவத்தெய்வக்கற்பினுள்
வெருவரச்செய்தூளவெய்யவன்புயம்
இருபதுமீரைந்துதலையுமேவினுன்
ஒருகணைக்காற்றுமோவுலகமேழுமே. (௧௨)

ஈண்டுநீயிருந்தருளேழொடேழெனுப்
பூண்டபேருலகங்கள்வலியிற்புக்கிடை
தேண்டியவ்வரக்கனைத்திருகித்தேவியைக்
காண்டியானிவ்வழிக்கொணருங்கைப்பணி. (௧௩)

ஏவல்செய்துணைவரேம்யாங்களீங்கிவன்
தாவரும்பெருவலித்தம்பிநம்பிநின்
சேவகமிதுவெனிற்சிறுகநோக்கியென்
மூவகையுலகுநின்மொழியின்முந்துமோ. (௧௪)

பெருமையோராயினும்பெருமைபேசிலார்
கருமமேயல்லதுபிறிதென்கண்டது
தருமமீயல்லதுதனித்துவேறுண்டோ
அருமையேதுனக்குநின்றவலங்கூர்தியோ. (கரு)

முளரிமேல்வைகுவான்முருகற்றந்தவத்
தளிரியல்பாகத்தான்றடக்கையாழியான்
அளவியொன்றுவரேயன்றியையமில்
இளவியர்தனித்தனிக்கிடைப்பரோதுணை. (கசு)

என்னுடைச்சிறுகுறைமுடித்தலீண்டொரீஇப்
பின்னுடைத்தாயினுமாகபேதுற
மின்னிடைச்சனகியைமீட்டுமீமொல்
பொன்னுடைச்சிலையினுய்விரைந்துபோயென்றான். (கஎ)

எரிகதிர்க்காதலனிணையகூறலும்
அருவியங்கண்டிறந்தன்பிஞேக்கினன்
திருவுறைமார்பனுந்தெளிவுதோன்றிட
ஒருவகையுணர்வுவந்துரைப்பதாயினன். (கஅ)

விலங்கெழிற்றேளிஞய்வினையினேனுமிவ்
விலங்குவிற்கரத்தினுமிருக்கவேயவள்
கலன்கழித்தனளிதுகற்புமேவிய
பொலன்குழைத்தெரிவையர்புரிந்துளோர்கள்யார். (கசு)

வாணெடுங்கண்ணியென்வரவுநோக்கயான்
தாணெடுங்கிரியொடேர்தடங்கடம்மொடும்
பூணெடும்புலம்பியிப்பொழுதுபோக்கினேன்
நாணெடுஞ்சிலைசுமந்துழலநாணிலேன். (உ0)

ஆறுடன்செல்பவரஞ்சொன்மாதரை
வேறுளார்துயர்செயின்விலக்கிவெஞ்சமத்
தூறுறத்தம்முயிருகுப்பரென்பதும்
தேறினென்றுயரநான்றீர்க்ககிற்றிலேன். (உக)

கருங்கடற்றொட்டனர்கங்கைதந்தனர்
பொரும்புலிமானொடுபுனலூட்டினர்
பெருந்தகையென்குலத்தரசர்பின்னொரு
திருந்திழைதுயரநான்றீர்க்கநோற்றிலேன். (உஉ)

இந்திரற்குரியதோரிடுக்கண்டீர்த்திகல்
அந்தகற்கரியபோரவுணற்றேய்த்தனன்
எந்தைமற்றவனின்வந்துதித்தயானுளேன்
வெந்துயர்க்கொடும்பழிவில்லிற்றுங்கினேன். (உங)

விரும்பெழிலெந்தையார்மெய்ம்மைவீயுமேல்
வரும்பழியென்றலான்மகுடஞ்சூடலேன்
கரும்பழிசொல்லியைப்பகைஞன்கைக்கொளப்
பெரும்பழிசூடினேன்பிழைத்ததென்னரோ. (உ௪)

என்னநொந்தின்னனபன்னியீடழிந்
துன்னருந்துயரத்துச்சோர்கின்றான்றனைப்
பன்னருங்கதிரவன்புதல்வன்பையுள்பார்த்
தன்னவெந்துயரெனுமளக்கர்நீக்கினான். (உ௫)

அய்யநீயாற்றலினாற்றினேனல
துய்வெனேயெனக்கிதினுறுதிவேறுண்டோ
வய்யகத்திப்பழிதீரமாய்வது
செய்வெனின்குறைமுடித்தன்றிச்செய்கலேன். (உ௬)

என்றனனிராகவனினையகாலையில்
வன்றிறன்மாருதிவணங்கினானெடுங்
குன்றிவர்தோளினாய்கூறவேண்டுவ
தொன்றுளததனைநீயுணர்ந்துகேளென. (உ௭)

கொடுந்தொழில்வாலியைக்கொன்றுகோமகன்
கடுங்கதிரோன்மகனுக்கிக்கைவளர்
நெடும்படைகூட்டினனலன்றிநேடரி
தடும்படையரக்கர்தமிருக்கையாணையாய். (உ௮)

வானதோமண்ணதோமாறுவெற்பதோ
ஏனமாநாகர்தமிருக்கைப்பாலதோ
தேனுளதெரியலாய்தெரிவதன்றவர்
ஊர்நமக்குற்றுழியுறுதலுண்மையால். (உ௯)

எவ்வுலகங்களுமிமைப்பினெய்துவர்
வவ்வுவரவ்வழிமகிழ்ந்தயாவையும்
வெவ்வினைவந்தெனவருவர்மீள்வரால்
அவ்வவருறைவிடமறியற்பாலவோ. (௩0)

ஒருமுறையேபரந்துலகம்யாவையும்
திருவுறைவேறிடந்தேரவேண்டுமால்
வரன்முறைநாடிடவரம்பின்றாலுல
கருமையுண்டளப்பருமாண்டுவேண்டுமால். (௩௧)

ஏழுபத்தாகியவெள்ளத்தெம்படை
ஊழியிற்கடலெனவுலகம்போர்க்குமால்
ஆழியைக்குடிப்பினுமயன்செயண்டத்தைக்
கீழ்மடுத்தெடுப்பினுங்கிடைத்தசெய்யுமால். (௩௨)

ஆதலாலன்னதேயமைவதாமென
நீதியாய்நினைந்தனெனெனநிகழ்த்தினான்
சாதுவாமென்றவத்தனுவின்செல்வனும்
போதுநாம்வாலிபாலென்னப்போயினார். (ருரு)

வேறு. வெங்கணாளியேறுமீளிமாவும்வேகநாகமும்
சிங்கவேறிரண்டொடுந்திரண்டவன்னசெய்கையார்
தங்குசாலமூலமார்தமாலமேலமாலைபோல்
பொங்குநாகமுந்துவன்றுசாரலூடுபோயினார். (ருச)

உழையுலாநெடுங்கண்மாதருசலூசலல்லவேல்
தழையுலாவுசந்தலர்ந்தசாரல்சாரலல்லவேல்
மழையுலாவுமுன்றிலல்லமன்றஞாறுசண்பகக்
குழையுலாவுசோலைசோலையல்லபொன்செய்குன்றமே. (ருரு)

அறங்கணாறுமேனியாரரிக்கணங்களோடுமெங்
கிறங்குபோதுமேறுபோதுமீறிலாதவோசையால்
கறங்குவார்கழற்கலன்கலிப்பமுந்துகண்முகிழ்த்
துறங்குமேகநன்குணர்ந்துமாகமீதுலாவுமே. (ருசு)

நீடுநாகமூடுமேகமோடநீருமோடநேர்
ஆடுநாகமோடமானயானையோடவாளிபோம்
மாடுநாகநீடுசாரல்வாளையோடும்வாவிபூ
டோடுநாகமோடவேங்கையோடும்யூகமோடவே. (ருஎ)

மருண்டமாமலைத்தடங்கள்செல்லலாவவல்லமால்
தெருண்டமாமதத்தயானைசீறிநின்றுசிந்தலால்
இருண்டகாரகிற்றடத்தொடித்துலர்ந்தசந்துவந்
துருண்டபோதழிந்ததேனொழுக்குபேரிழுக்கினே. (ருஅ)

மினன்மணிக்குலந்துவன்றிவில்லலர்ந்துவிண்குலாய்
அனல்பரப்பவொப்பமீதிமைப்பவந்தவிப்பபோல்
புனல்பரப்பவொப்பிருந்தபொன்பரப்புமென்பரால்
இனையவிற்றடக்கைவீரரேகுகின்றகுன்றமே. (ருகூ)

மருவியாடும்வாவிதோறும்வானயாறுபாயும்வந்
திருவியார்தடங்கண்மீனினேறுபாயுமாறுபோல்
அருவிபாயுமொன்றிரண்டிறனைபாயுமேனலில்
குருவிபாயுமோடிமந்திகோடுபாயுமாடெலாம். (சு0)

தேனிழுக்குசாரல்வாரிசெல்லமீதுசெல்லநாள்
மீனிருக்குமன்றிவானவில்லிழுக்கும்வெண்மதிக்
கூனிழுக்குமற்றுலாவுகோளிழுக்குமென்பரால்
வானிழுக்குமேலவாயமன்றஞாறுகுன்றமே. (சுக)

அன்னதாயகுன்றினுறுசென்றவீரரைந்தொடைக்
துன்னலாயயோசனைக்குமும்பரேறியிம்பரில்
பொன்னினுடிழிந்ததன்னவாலிவாழ்பொருப்பிடம்
துன்னினர்கள்செய்வதென்னையென்றுநின்றுசொல்லுவார்.

கலன்காண்படலம்முற்றிற்று. ஆ திருவிருத்தம் - உசச.

## எ - ஆவது. வாலிவதைப்படலம்.

அவ்விடத்திராமனீயழைத்துவாலியானதோர்
வெவ்விடத்தின்வந்துபோர்விளைக்குமேல்வைவேறுநின்
றெவ்விடத்துணிந்தமைந்ததென்கருத்திதென்றனன்
தெவ்வடக்கும்வென்றியானுநன்றிதென்றுசிந்தியா. (க)

வார்த்தையன்னதாகவானியங்குதேரினுன்மகன்
நீர்த்தரங்கவேலையஞ்சநீலமேகநாணநேர்
வேர்த்துமண்ணுளோரிரிந்துவிண்ணுளோர்கள்விம்மமேல்
ஆர்த்தவோசையீசனுண்டவண்டமுற்றுமுண்டதே. (உ)

இடித்துரப்பிவந்துபோரெதிர்த்தியேலடர்ப்பெனென்
றடித்தலங்கள்கொட்டிவாழ்மடித்தடுத்தலங்குதோள்
புடைத்துநின்றுளைத்தபூசல்புக்கதென்பமிக்கிடங்
துடிப்பவங்குறங்குவாலிதிண்செவித்தொளைக்கணே. (ங)

வேறு. மாற்பெருங்கடகரிமுழக்கம்வாளரி
ஏற்பதுசெவித்தலத்தென்னவோங்கிய
ஆர்ப்பொலிகேட்டனனமளிமேலொரு
பாற்கடல்கிடந்ததேயனையபான்மையான். (ச)

உருத்தனன்பொரவெதிர்ந்திளவலுற்றமை
வரைத்தடந்தோளினுன்மனத்தினெண்ணினன்
சிரித்தனனவ்வொலிதிசையினப்புறத்
திரித்ததவ்வுலகமொரேழொடேழையே. (ரு)

எழுந்தனன்வல்விரைந்திறுதியூழியிற்
கொழுந்திரைக்கடல்கிளர்ந்தனையகொள்கையான்
அழுத்தியதக்கிரியருகின்மால்வரை
விழுந்தனதோள்புடைவிசித்தகாற்றினே. (சு)

போய்ப்பொடித்தனமயிர்ப்புறத்தவெம்பொறி
காய்ப்பொடூற்றெழுவடகனலுங்கண்கெடத்
தீப்பொடித்தனவிழிதேவர்நாட்டினும்
மீப்பொடித்தனபுகையுயிர்ப்புவீங்கவே. (எ)

கைக்கொடுகைத்தலம்புடைப்பக்காவலின்
திக்கயங்களுமதச்செருக்குச்சிந்தின
உக்கனவுருமினமுலைந்தவும்பரும்
நெக்கனநெரிந்தனநின்றகுன்றமே. (௮)

வந்தனென்வந்தனெனென்றவாசகம்
இந்திரிமுதற்றிசையெட்டுங்கேட்டன
சந்திரன்முதலியதாரகைக்குழாம்
சிந்தினமணிமுடிசிகரந்தீண்டவே. (௯)

வீசினகாற்றின்வேர்பறிந்தவெற்பினம்
ஆசையையுற்றனவண்டப்பித்திகை
பூசினவெண்மயிர்பொடித்தவெம்பொறி
கூசினனந்தகன்குலைந்ததும்பரே. (௧0)

கடித்தவாயெயிறுகுகனல்கள்கார்விசும்
பிடித்தவாயுருமுகுமினத்திற்சிந்தின
தடித்துவீழ்வனவெனத்தகர்ந்துசிந்தின
வடித்ததோள்வலயத்தின்வயங்குகாசரோ. (௧௧)

ஞாலமுநாற்றிசைப்புனலுநாகரும்
மூலமுமுற்றிடமுடிவிற்றீக்குமக்
காலமுமொத்தனன்கடலிற்றான்கடை
ஆலமுமொத்தனனெவருமஞ்சவே. (௧௨)

ஆயிடைத்தாரையென்றமிழ்திற்றோன்றிய
வேயிடைத்தோளினாளிடைவிலக்கினாள்
வாயிடைப்புகைவரவாலிகண்வரும்
தீயிடைத்தன்னெடுங்கூந்தறீகின்றாள். (௧௩)

விலக்கலைவிடுவிடுவிளித்துளானுரம்
கலக்கியக்கடல்கடைந்தமிழ்துகண்டென
உலக்கவின்னுயிர்குடித்தொல்லைமீள்குவல்
மலைக்குலமயிலெனமடந்தைகூறுவாள். (௧௪)

கொற்றவநின்பெருங்குவவுத்தோள்வலிக்
கிற்றையதல்லநாளீடுண்டேகுவான்
பெற்றிலன்பிறந்திலன்பெயர்த்தும்போர்செயற்
குற்றதுநெடுந்துணையுடைமையாலென்றாள். (௧௫)

மூன்றெனமுற்றியமுடிவில்பேருல
கேன்றுடனுற்றனவெனக்குநேரெனத்
தோன்றினுந்தோற்றவைதொலையுமென்றலின்
சான்றுளவன்னவைதையல்கேட்டியால். (௧௬)

மந்தரநெடுவரைமத்துவாசுகி
அந்தமில்கடைகயிறடைகலாழியான்
சந்திரன்றுணெதிர்தருக்கின்வாங்குநர்
இந்திரன்முதலியவமரரேனையோர். (கஎ)

பெயர்வுறவலிக்கவுமிடுக்கில்பெற்றியார்
அயர்வுறலுற்றதைநோக்கியானது
தயிரெனக்கடைந்தவர்க்கமிழ்தந்தந்தவும்
மயிலியற்குயின்மொழிமறக்கலாவதோ. (கஅ)

ஆற்றினெனமரருமவுணர்யாவரும்
தோற்றனரெனையவர்சொல்லற்பாலதோ
கூற்றுமென்பெயர்சொலக்குலையுமாரினி
மாற்றவற்காகிவந்தெதிருமாண்பினோர். (கக)

பேதையரெதிர்குவரெனினும்பெற்றுடை
ஊதியவரங்களுமுரமுமுள்ளதில்
பாதியுமென்னதாற்பகைப்பதெங்ஙனம்
நீதுயரொழிகெனநின்றுகூறினான். (உ0)

அன்னதுகேட்டவளரசவாயவற்
கின்னுயிர்நட்பமைந்திராமனென்பவன்
உன்னுயிர்கோடலுக்குடன்வந்தானெனத்
துன்னியவன்பினர்சொல்லினரென்றாள். (உக)

உழைத்தவல்லிருவினைக்கூறுகாண்கிலா
தழைத்தயருலகினுக்கறத்தினறெலாம்
இழைத்தவற்கியல்பலவியம்பியென்செய்தாய்
பிழைத்தனைபாவியுன்பெண்மையாலென்றான். (உஉ)

இருமையுநோக்குறுமியல்பினற்கிது
பெருமையோவிங்கிதிற்பெறுவதென்கொலோ
அருமையினின்றுயிரளிக்குமாறுடைத்
தருமமேதவிர்க்குமோதன்னைத்தானரோ. (உ௩)

ஏற்றபேருலகெலாமெய்தியீன்றவள்
மாற்றவளேவமற்றவடன்மைந்தனுக்
காற்றருமுவகையாலளித்தவையனைப்
போற்றலையின்னனபுகறற்பாலையோ. (உச)

நின்றபேருலகெலாநெருக்கிநேரினும்
வென்றிவெஞ்சிலையலாற்பிறிதுவேண்டுமோ
தன்றுணையொருவருந்தன்னில்வேறிலான்
புன்றொழிற்குரங்கொடுபுணருநட்பனே. (உரு)

விளக்கொளியகிற்புகைவிழுங்கமளிமென்கொம்
பிளைக்குமிடைமங்கையருமைந்தர்களுமேறத்
தளத்தகுமலர்த்தவிசிகந்துநகுசந்தின்
தொளைத்துயிலுவந்துதுயில்வுற்றகுளிர்தும்பி. (எகூ)

தாமரைமலர்த்தவிசிகந்துதகையன்னம்
மாமரனிரைத்தொகுபொதும்பினுழைவைகத்
தேமரனடுக்கிதணிடைச்செறிகுரம்பைத்
தூமருவெயிற்றியரொடன்பர்துயில்வுற்றார். (அ0)

வள்ளிபுடைசுற்றியுயர்சிற்றிலைமரந்தோ
றெள்ளருமறிக்குருளொடண்டர்களிருந்தார்
கள்ளரினொளித்துழனெடுங்கழுதொடுங்கி
முள்ளெயிறுதின்றுபசிமூழ்கிடவிருந்த. (அக)

சரம்பயினெடுந்துளிநிமிர்ந்தபுயல்சார
உரம்பெயர்வில்வன்கரிகரந்துறவொடுங்கா
வரம்பகனெடும்பிரசம்வைகல்பலவைகும்
முரம்பினினிரம்பலமுழைஞ்சிடைநுழைந்த. (அஉ)

இத்தகையமாரியிடை துன்னியிருளெய்த
மய்த்தகுமணிக்குறுநகைச்சனகன்மான்மேல்
உய்த்தவுணர்வத்தினனெருப்பிடையுயிர்ப்பான்
வித்தகனிலக்குவனைமுன்னினன்விளம்பும். (அங)

வேறு. மழைக்கருமின்னெயிற்றரக்கன்வஞ்சனை
இழைப்பருங்கொங்கையுமெதிர்வுற்றின்னலின்
உழைத்தனளுலைந்துயிருலக்குமொன்றினும்
பிழைப்பரிதெனக்குமிதென்னபெற்றியோ. (அச)

தூநிறச்சுடுசரந்தூணிதூங்கிட
வானுறப்பிறங்கியவயிரத்தோளொடும்
யானுறக்கடவதேயிதுவுமிங்கிலை
வேனிறத்துற்றதொத்துளவும்வீகிலேன். (அரு)

தெரிகணைமலரொடுந்திறந்தநெஞ்சொடும்
அரியவன்றுயரொடும்யானும்வைகுவேன்
எரியுமின்மினிமணிவிளக்கினின்றுணைக்
குரீஇயினம்பெடையொடுந்துயில்வகூட்டினுள். (அசு)

வானகமின்னினுமழைமுழங்கினும்
யானகமெலிகுவேனெயிற்றராவெனக்
கானகம்புகுந்தியான்முடித்தகாரியம்
மேனகுங்கீழ்நகுமினியென்வேண்டுமால். (அஎ)

மறந்திருந்துய்கலேன்மாரியீதெனின்
இறந்துவிண்சேர்வதுசரதமிப்பழி
பிறந்துபின்றீர்வலோபின்னரன்னது
துறந்துசென்றுறுவலோதுயரின்வைகுவேன். (௮௮)

ஈண்டுநின்றரக்கர்தமிருக்கையாமினிக்
காண்டலிற்பற்பலகாலங்காண்டுமால்
வேண்டுவதன்றிதுவீரநோய்தெற
மாண்டனெனென்றதுமாட்சிப்பாலதால். (௮௯)

செப்புருக்கனையவிம்மாரிச்சீகரம்
வெப்புறப்புரஞ்சுடவெந்துவீவதோ
அப்புருக்கொண்டவாணெடுங்கணாயிழை
துப்புருக்குமுதவாய்நுகர்ந்துதுய்த்தயான். (௯௦)

நெய்யடைதீயெதிர்நிறுவிநிற்கவள்
கய்யடையென்றவச்சனகன்கட்டுரை
பொய்யடையாக்கியபொறியிலேனொடு
மெய்யடையாதினிவிளிதனன்றரோ. (௯௧)

தேற்றுவாய்நீயுளையாகத்தேறிநின்
ருற்றுவேனானுளெனாகவால்வளை
தோற்றுவாளல்லளித்துன்பமாரினி
மாற்றுவார்துயர்க்கொருவரம்புண்டாகுமோ. (௯௨)

விட்டபோர்வாளிகள்விரிஞ்சன்விண்ணையும்
சுட்டபோதிமையவர்முதலதொல்லையோர்
பட்டபோதுலகமுமுயிரும்பற்றறக்
கட்டபோதல்லதுமயிலைக்காண்டுமோ. (௯௩)

தருமமென்றொருபொருடன்னையஞ்சியான்
தெருமருகின்றதுசெறுநர்தேவரோ
டருமையின்வீந்தனரென்னுமஃதலால்
உருமெனவொலிபடுமுரவிலோயென்றான். (௯௪)

இளவலுமுரைசெய்வானெண்ணுநாளினும்
உளவலகூதிருமிறுதியுற்றதால்
களவுசெய்தவருறைகாணுங்காலமீ
தளவியலாகியதாணையாழியாய். (௯௫)

திரைசெயத்திண்கடலமிழ்தஞ்செங்கணான்
உரைசெயத்தரினுமத்தொழிலுவந்திலன்
வரைமுதற்கலப்பைகண்மாடுநாட்டித்தன்
குரைமலர்த்தடக்கையாற்கடைந்துகொண்டனன். (௯௬)

மனத்தினினுலகெலாம்வகுத்துவாய்ப்பெயும்
நினைப்பினனாயினுநேமியானெடும்
எனைப்பலபடைக்கலமேந்தியாரையும்
வினைப்பெருஞ்சூழ்ச்சியிற்பொருதுவெல்லுமால். (௯௭)

கண்ணுடைநுதலினன்கணிச்சிவானவன்
விண்ணிடைப்புரஞ்சுடவெகுண்டமேலைநாள்
எண்ணியசூழ்ச்சியுமீட்டிக்கொண்டவும்
அண்ணலேயொருவராலறியற்பாலவோ. (௯௮)

ஆகுநர்யாரையுந்துணைவராக்கிப்பின்
ஏகுறுநாளிடையெய்தியெண்ணுவ
சேகறப்பன்முறைதெருட்டிச்செய்தபின்
வாகையென்றொருபொருள்வழுவற்பாலதோ. (௯௯)

அறத்துறைதிறம்பினரரக்கராற்றலர்
மறத்துறைநமக்கெனவலிக்கும்வன்மையோர்
திறத்துறைநன்னெறிதிறம்பலுண்டெனின்
புறத்தினியார்திறம்புகழும்வாகையும். (௧௦௦)

பைந்தொடிக்கிடர்களைபருவம்பையவே
வந்தடுத்துளதினிவருத்தநீங்குவாய்
அந்தணர்க்காகுநாமரக்கர்க்காகுமோ
சுந்தரத்தனுவலாய்சொல்லுநீயென்றான். (௧௦௧)

உறுதியஃதேயெனவுணர்ந்தவூழியான்
இறுதியுண்டேகொலிம்மாரிக்கென்பதோர்
தெறுதுயருழந்தனன்றேயத்தேய்வுசென்
றறுதியையடைந்ததப்பருவமாண்டுபோய். (௧௦௨)

மள்கலில்பெருங்கொடைமருவிமண்ணுளோர்
உள்கியபொருளெலாமுதவியற்றபோ
தெள்கலிலிரவலர்க்கீவதின்மையால்
வெள்கியமாந்தரின்வெளுத்தமேகமே. (௧௦௩)

தீவினைநல்வினையென்னத்தேற்றிய
பேர்வினைப்பொருடனையறிந்துபெற்றதோர்
ஆய்வினைமெய்யுணர்வணுகவாசறும்
மாயையின்மாய்ந்ததுமாரிப்பேரிருள். (௧௦௪)

மூளமர்தொலைவுறமுரசவிந்தபோல்
கோளமைக்கொண்முகில்குமுறலோவின
நீளடுகணையெனத்துளியுநீங்கின
வாளுறையுற்றெனமறைந்தமின்னெலாம். (௧௦௫)

தடுத்ததாணெடுந்தடங்கிரிகடாழ்வரை
அடுத்தநீரொழிந்தனவருவிதூங்கின
எடுத்தநூலுத்தரியத்தொடெய்திநின்
றுடுத்தவானிறத்துகிலொழிந்தபோலுமே. (௧௦௬)

மேகமாமலைகளின்புறத்துவீதலால்
மாகயாறியாவையும்வாரியற்றன
வாகையாற்றகவுழந்தழிவினன்பொருள்
போகவாறொழுகலான்செல்வம்போன்றவே. (௧௦௭)

கடந்திறந்தெழுகளிறனையகார்முகில்
இடந்திறந்தேகலிற்பொலிந்ததிந்துவும்
நடந்திறனவில்வுறுநங்கைமார்முகம்
படந்திறந்துருவலிற்பொலியும்பான்மைபோல். (௧௦௮)

பாசிழைமடந்தையர்பகட்டுவெம்முலை
பூசியசாந்தினைப்புலர்த்துகுங்குமம்
மூசினமுயங்குசேறொழியமொண்டுற
வீசியநறுமலர்விண்டுவாடையே. (௧௦௯)

மன்னவன்றலைமகன்வருத்தமாற்றுவான்
அந்நெறிப்பருவம்வந்தணுகிற்றாகலால்
பொன்னினைநாடியபோதுமென்பபோல்
அன்னமுந்திசைதிசையகன்றவிண்ணின்வாய். (௧௧௦)

தஞ்சிறையொடுக்கினதழுவுமின்னல
நெஞ்சுறுபயனிலநினைப்புநீண்டன
மஞ்சுறுநெடுமலைபிரிந்தமாமயில்
அஞ்சினமிதிலைநாட்டன்னமன்னவாய். (௧௧௧)

வஞ்சனைதீவினைமறந்தமாதவர்
நெஞ்செனத்தெளிந்தனநீரநீர்தொறும்
பஞ்செனச்சிவக்குமென்பாதப்பேதையர்
அஞ்சனக்கண்ணெனப்பிறழ்ந்தவாடன்மீன். (௧௧௨)

வாடியமடந்தையர்வதனமொத்தன
தாடொகமலர்ந்தனமுதிர்ந்ததாமரை
கூடினர்துவரிதழ்க்கோலங்கொண்டன
சேடுறுநறுமுகைவிரிந்தசெங்கிடை. (௧௧௩)

கல்வியிற்றிகழ்கணக்காயர்கம்பலை
பல்விதச்சிறுஅரெனப்பகர்வபல்லரி
செல்விடத்தல்லதொன்றுரைத்தல்செய்கலா
நல்லறிவாளரினவிந்தநாவெலாம். (௧௧௪)

செறிபுனற்பூந்துகிறிரைக்கையாற்றிரைத்
துறுதுணைக்கான்மடுத்தொத்தவோதநீர்
எறுழ்வலிக்கணவனையெய்தியாறெலாம்
முறுவலிக்கின்றனபோன்றமுத்தெலாம் (ககரு)

சொன்னிறைகேள்வியிற்றொடர்ந்தமாந்தரின்
இன்னிறப்பசலையுற்றிருந்தமாதரின்
தன்னிறம்பயப்பயநீங்கித்தள்ளரும்
பொன்னிறம்பொருந்தினபூகத்தாறெலாம். (ககசு)

பயின்றுடல்குளிர்ப்பவும்பழனநீத்தவண்
இயன்றிலவிளவெயிலெழுதுமெய்யன
வயின்றொறும்வயின்றொறுமடித்தவாயன
துயின்றனவிடங்கர்மாத்தடங்கடோறுமே. (ககஎ)

கொஞ்சுறுங்கிளிநெடுங்குதலைகூடின
அஞ்சிறையறுபதமளகவோளிய
எஞ்சலில்குழையனவிடைநுடங்குவ
வஞ்சிகள்பொலிந்தனமகளிர்மாலைபோல். (ககஅ)

அளித்தனமுத்தினந்தோற்பமானனார்
வெளித்தெதிர்விழிக்கவும்வெள்கிமென்மையால்
ஒளித்தனவாமெனவொடுங்குகண்ணன
குளித்தனமண்ணிடைக்கூனநந்தெலாம். (கககூ)

மழைபடப்பொதுளியமருதத்தாமரை
தழைபடப்பேரிலைப்புரையிற்றங்குவ
விழைபடப்பெடையொடுமெள்ளநள்ளிகள்
புழையடைத்தொடுங்கினவச்சைமாக்கள்போல். (கஉ௦)

கார்காலப்படலம் முற்றிற்று. ஆக திருவிருத்தம்-ருஎ௦.

## க௦-ஆவது. கிட்கிந்தைப்படலம்.

அன்னகால்மகனுமளவினில்
முன்னவீரனிளவலைமொய்ம்பினோய்
சொன்னவெல்லையினூங்குமத்தூங்கிய
மன்னன்வந்திலனென்செய்தவாறரோ. (க)

பெறலருந்திருப்பெற்றுதவிப்பெருந்
திறனினைந்திலன்சீர்மையிற்றீர்ந்தனன்
அறமறந்தனனன்புகிடைக்கநம்
மறனறிந்திலன்வாழ்வின்மயங்கினான். (உ)

நன்றிகொன்றருநட்பினைநாரறுத்
தொன்றுமெய்ம்மைசிதைத்துரைபொய்த்துளாற்
கொன்றுநீக்குதல்குற்றத்துநீங்குமால்
சென்றுமற்றவன்சிந்தையைத்தேர்குவாய். (௩)

வெம்புகண்டகர்விண்புகவேரறுத்
திம்பர்நல்லறஞ்செய்யவெடுத்தவிற்
கொம்புமுண்டருங்கூற்றமுமுண்டுங்கள்
அம்புமுண்டென்றுசொல்லுநம்மாணையே. (௪)

நஞ்சமன்னவரைநலிந்தாலது
வஞ்சமன்றுமனுவழக்காதலான்
* அஞ்சிலைம்பதிலொன்றறியாதவன்
நெஞ்சினின்றுநிலாவநிறுத்துவாய். (௫)

ஊருமாளுமரசுநுஞ்சுற்றமும்
நீருமாளுதிரென்பதுநேர்ந்தநாள்
வாரும்வாரலிராமெனின்வானரப்
பேருமாளுமெனும்பொருள்பேசுவாய். (௬)

இன்னுநாடுதுமிங்கிவர்க்கும்வலி
துன்னினாரையெனத்துணிந்தாரெனின்
உன்னைவெல்லவுலகொருமூன்றினும்
நின்னலாற்பிறரின்மைநிகழ்த்துவாய். (௭)

நீதியாதிநிகழ்த்தினைநின்றது
வேதியாதபொழுதுவெகுண்டவண்
சாதியாதவர்சொற்றரத்தக்கனை
போதியாதியென்றான்புகழ்ப்பூணினான். (௮)

ஆணைசூடியடிதொழுதாண்டிறை
பாணியாதுபடர்வெரிந்பாழ்படாத்
தூணிபூட்டித்தொடுசிலைதொட்டருஞ்
சேணினீங்கினன்சிந்தையுணீங்கலான். (௯)

மாறுநின்றமரனுமலைகளும்
நீறுசென்றுநெடுநெறிநீங்கிட
வேறுசென்றனன்மேன்மையனாயினும்
ஆறுசென்றிலனாணையினேகுவான். (௧௦)

விண்ணுறத்தொடர்மேருவின்சீர்வரை
மண்ணுறப்புக்கழுந்தினமாதிரம்
கண்ணுறத்தெரிவுற்றதுகட்செவி
உண்ணிறக்கழற்சேவடியூன்றலால். (௧௧)

---

* அஞ்சியல்லதொன்றாரறிவாரவர்எனவும்பாடம்.

வெம்புகானிடைப்போகின்றவேகத்தால்
உம்பர்தோயுமராமரத்தூடுசெல்
அம்பிற்சென்றனனன்றடல்வாலிதன்
தம்பிமேற்செலுமானவன்றம்பியே. (௧௨)

மாடுவென்றியொர்மாதிரயானையின்
சேடுசென்றுசெடிலொருதிக்கின்மா
நாடுகின்றதுநண்ணியகால்பிடித்
தோடுகின்றதுமொத்துளனாயினான், (௧௩)

உருக்கொளொண்கிரியொன்றினின்றொன்றினைப்
பொருக்கவெய்தினன்பொன்னொளிர்மேனியான்
அருக்கன்மாவுதயத்தினின்றத்தமாம்
பருப்பதத்தினையெய்தியபண்பினால். (௧௪)

தன்றுணைத்தமயன்றனிவாளியிற்
சென்றுசேணுயர்கிட்கிந்தைசேர்ந்தவன்
குன்றினின்றொருகுன்றினிற்குப்புறும்
பொன்றுளங்குளைச்சீயமும்போன்றனன். (௧௫)

கண்டவானரங்காலனைக்கண்டபோல்
மண்டியோடினவாலிமகற்கையா
கொண்டசீற்றத்திளையோன்குறுகினான்
சண்டவேகத்தினாலென்றுசாற்றலும். (௧௬)

அன்னதோன்றலுமாண்டொழிலான்வர
வின்னதென்றறிவான்மருங்கெய்தினான்
மன்னன்மைந்தன்மனக்கருத்துட்கொளாப்
பொன்னின்வார்கழற்றாதையிற்போயினான். (௧௭)

நளனியற்றியநாயகக்கோயிலுள்
தளமலர்த்தகப்பள்ளியிற்றாழ்குழல்
இளமுலைச்சியரேந்தடிதைவர
விளைதுயிற்குவிருந்துவிரும்புவான். (௧௮)

தெள்ளியோருதவப்பெருஞ்செல்வமாம்
கள்ளினாலதிகங்களித்தான்கதிர்ப்
புள்ளிமாநெடும்பொன்வரைபுக்கதோர்
வெள்ளிமால்வரையென்னவிளங்குவான். (௧௯)

சிந்துவாரத்திருநறைதேக்ககில்
சந்தமாமயிற்சாயலர்தாழ்குழற்
கந்தமாமலர்க்காடுகடாவிய
மந்தமாருதம்வந்துறவைகுவான். (௨0)

தித்தியாநின்றசெங்கிடைவாய்ச்சியர்
முத்தவாண்முகைமுள்ளெயிற்றூறுதேன்
பித்துமாலும்பிறவும்பெருக்கலான்
மத்தவாரணமென்னமயங்கினான். (௨௧)

மகுடகுண்டலமேமுதன்மண்டலத்
துகுநெடுஞ்சுடர்க்கற்றையுலாவலால்
பகலவன்சுடர்பாய்பனிமால்வரைத்
தகமலர்ந்துபொலிந்துதயங்குவான். (௨௨)

கிடந்தனன்கிடந்தானைக்கிடைத்திரு
தடங்கைகூப்பினன்றாரைமுன்னாட்டந்த
மடங்கல்வீரனம்மாற்றம்விளம்புவான்
தொடங்கினானவனைத்துயினீக்குவான். (௨௩)

எந்தைகேளவ்விராமற்கிளையவன்
சிந்தையுண்ணெடுஞ்சீற்றத்திருமுகம்
தந்தளிப்பத்தடுப்பரும்வேகத்தன்
வந்தனனுன்மனக்கருந்தியாதென்றான். (௨௪)

இனையமாற்றமிசைத்தனனென்பதோர்
நினைவிலானெடுஞ்செல்வநெருக்கவும்
நனைநறுந்துளிநஞ்சுமயக்கவும்
தனையுணர்ந்திலன்மெல்லணைதங்கினான். (௨௫)

ஆதலோடுமரசிளங்கோளரி
யாதுமுன்னின்றியற்றுவதின்மையால்
கோதில்சிந்தையநுமனைக்கூவுவான்
போதமேயினன்போதகமேயனான். (௨௬)

மந்திரத்தனிமாருதிதன்னொடும்
வெந்திறற்படைவீரர்விராய்வர
அந்தரத்தின்வந்தன்னைதன்கோயிலை
இந்திரற்குமகன்மகனெய்தினான். (௨௭)

எய்திமேற்செயத்தக்கதென்னென்றலும்
செய்திர்செய்தற்கருநெடுந்தீயன
நொய்திலன்னவைநீக்கவுநோக்குதிர்
உய்திர்போலுமுதவிகொன்றீரெனா. (௨௮)

மீட்டுமொன்றுவிளம்புகின்றாள்படை
கூட்டுமென்றுமைக்கொற்றவன்கூறிய
நாட்டிறம்பினுந்நாட்டிறம்பும்மெனக்
கேட்டிலீரினிக்காண்டிர்கிடைத்திரால். (௨௯)

வாலியாருயிர்காலனும்வாங்கவிற்
கோலிவாலியசெல்வங்கொடுத்தவர்
போலுமாலும்புறத்திருப்பாரிது
சாலுமாலுங்கடன்மையினோர்க்கெலாம். (௩௦)

தேவிநீங்கவத்தேவரிற்சீரியன்
ஆவிநீங்கினன்போலயர்வானது
பாவியாதுபருகுதிர்போலுநும்
காவிநாண்மலர்க்கண்ணியர்காதனீர். (௩௧)

திறம்பினீர்மெய்சிதைத்தீருதவியை
நிறம்பொலீஇருங்கடிவினைநேர்ந்ததால்
மறஞ்செய்வானுறின்மாளுதிர்மற்றினிப்
புறஞ்செய்தாவதெனென்கின்றபோழ்தின்வாய். (௩௨)

கோளுறுத்தற்கரியகுரக்கினம்
நீளெழுத்தொடருநெடுவாயிலைத்
தாளுறுத்தித்தடவரைதந்தன
மூளுறுத்தியடுக்கினமொய்ம்பினால். (௩௩)

சிக்குறக்கடைசேமித்தசெய்கைய
தொக்குறுத்தமரத்ததுவன்றின
புக்குறுக்கிப்புடைத்துமெனப்புறம்
மிக்கிறுத்தனவெற்புமிறுத்தன. (௩௪)

காக்கவோகருத்தென்றுகதத்தினால்
பூக்கமூரற்புரவலர்புங்கவன்
தாக்கணங்குறைதாமரைத்தாளினால்
நூக்கினனக்கதவினைநொய்தினின். (௩௫)

காவன்மாமதிலுங்கதவுங்கடி
மேவும்வாயிலடுக்கியவெற்பொடும்
தேவுசேவடிதீண்டலுந்தீண்டரும்
பாவமாமெனப்பற்றழிந்திற்றவால். (௩௬)

நொய்தினோன்கதவும்முதுவாயிலும்
செய்தகன்மதிலுந்திசையோசனை
அய்யிரண்டினளவடியற்றுக
வெய்துநின்றகுரக்கும்வெருக்கொள. (௩௭)

பரியமாமதிலும்படர்வாயிலும்
சரியவீழ்ந்ததடித்திலிடித்தலை
நெரியநெஞ்சுபிளக்கநெடுந்திசை
இரியலுற்றனவிற்றிலவின்னுயிர். (௩௮)

பகரவேயுமரிதுபரித்தெழு
புகரில்வானரமஞ்சியபூசலான்
சிகரமால்வரைசென்றுதிரிந்துழீஇ
மகரவேலையையொத்ததுமாநகர். (௩௯)

வானரங்கள்வெருவிமலையொரீஇக்
கானெருங்குபடரவக்கார்வரை
மீனெருங்கியவானகமீனெலாம்
போனபின்பொலிவற்றதுபோன்றதே. (௪0)

அன்னகாலையினண்டகையாழியான்
பொன்னினன்னகர்வீதியிற்புக்கனன்
சொன்னதாரையைச்சுற்றினர்நின்றவர்
என்னசெய்குவதெய்தினனென்றனர். (௪௧)

அனையனுள்ளமுமாய்வளையாயலாம்
மனையின்வாயில்வழியினைமாற்றினான்
நினையும்வீரனந்நீணெறிநோக்கலன்
வினையமீதென்றநுமன்விளம்பினன். (௪௨)

நீரெலாமயனீங்குமினேர்ந்தியான்
வீரனுள்ளம்விளங்குவலென்றலும்
பேரநின்றனர்யாவரும்பேர்கலாத்
தாரைசென்றனடார்குழலாரொடும். (௪௩)

உரைசெய்வானரவீரருவந்துறை
அரைசர்வீதிகடந்தகன்கோயிலைப்
புரைசையானையன்னான்புகலோடுமவ்
விரைசெய்வார்குழற்றூரைவிலக்கினாள். (௪௪)

விலங்குமெல்லியல்வெண்ணகைவெண்மதி
இலங்குநுண்ணிடையேந்திளமென்முலைக்
குலங்கடோகைமகளிர்குழாத்தினால்
வலங்கொள்வீதிநெடுவழிமாற்றினாள். (௪௫)

வில்லும்வாளுமணிதொறுமின்னிட
மெல்லரிக்குரன்மேகலையார்த்தெழப்
பல்வகைப்புருவக்கொடிபம்பிட
வல்லியர்யம்வலத்தினில்வந்ததே. (௪௬)

வேறு. ஆர்க்குநூபுரங்கள்பேரியல்குலாந்தடந்தேரொத்த
வேற்கண்வெம்புருவம்போர்வின்மெல்லியர்வளைந்தபோது
பேர்க்கருஞ்சீற்றம்பேரமுகம்பெயர்ந்தொதுங்கிற்றல்லால்
பார்க்கவுமஞ்சினனப்பணையினுமுயர்ந்ததோளான். (௪எ)

தாமரைவதனஞ்சாய்த்துத்தனுநெடுந்தரையினூன்றி
மாமியர்குழுவின்வந்தாளுமெனமைந்தனிற்பப்
பூமியிலணங்கனார்தம்பொதுவிடைப்புகுந்துபொற்றோள்
தூமனநெடுங்கட்டாரைநடுங்குவாளினையசொன்னாள். (சஅ)

அந்தமில்காலநோற்றவாற்றலுண்டாயினன்றி
இந்திரன்முதலினோராலெய்தலாமியல்பிற்றன்றே
மய்ந்தநின்பாதங்கொண்டெம்மனைவரப்பெற்றுவாழ்ந்தேம்
உய்ந்தனம்வினையுந்தீர்ந்தேமுறுதிவேறிதினூங்குண்டோ. (சகூ)

வெய்தினீவருதனோக்கிவெருவுநுஞ்சேனைவீர
செய்திதானுணர்கிலாதுதிருவுளந்தெரித்தியென்றாள்
அய்யநீயாழிவேந்தனடியிணைபிரிகலாதாய்
எய்தியதென்னையென்றாளிசையினுமினியசொல்லாள். (ருo)

ஆர்கொலோவுரைசெய்தாரென்றருள்வரச்சீற்றமஃகாப்
பார்குலாமுழுவெண்டிங்கள்பகல்வந்தபடிவம்போலும்
ஏர்குலாமுகத்தினாளையிறைமுகமெடுத்துநோக்கித்
தார்குலாமலங்கன்மார்பன்றாயரைநினைந்துநைந்தான். (ருக)

மங்கலவணியைநீக்கிமணியணிதுறந்துவாசக்
கொங்கலர்கோதைமாற்றிக்குங்குமஞ்சாந்தங்கொட்டாப்
பொங்குவெம்முலைகள்பூகக்கழுத்தொடுமறையப்போர்த்த
நங்கையைக்கண்டவள்ளனயனங்கள்பனிப்பநின்றான். (ருஉ)

இனையராமென்னையீன்றவிருவருமென்னவந்த
நினைவினனயர்ப்புச்சென்றநெஞ்சினனெடிதுநின்றான்
வினவினாட்கெதிரோர்மாற்றம்விளம்பவும்வேண்டுமென்றப்
புனைகுழலாட்குவந்தகாரியம்புகல்வதானான். (ருஙு)

சேனையுமியானுந்தேடித்தேவியைத்தருவெனென்று
மானவற்குரைத்தமாற்றமறந்தனனருக்கன்மைந்தன்
ஆனவனமைதிவல்லையறியெனவருளின்வந்தேன்
மேனிலையனையான்செய்கைவிளைந்தவாவிளம்புகென்றான். (ருச)

சிறுவாயல்லையையசிறியவர்தீமைசெய்தால்
ஆறுவாய்நீயலான்மற்றாருளரயர்ந்தானல்லன்
வேறுவேறுலகமெங்குந்தூதரைவிடுத்தவெல்லை
ஊறுமாநோக்கித்தாழ்த்தானுதவிமாறுதவியுண்டோ. (ருரு)

ஆயிரகோடிதூதரரிக்கணமழைப்பவாணை
போயினர்புகுதுநாளும்புகுந்ததுபுகல்புக்கோர்க்குத்
தாயினுநல்லநீரேதணிதிராற்றருமமஃதால்
தீயனசெய்யாராயின்யாவரேசெறுநராவார். (ருசு)

அடைந்தவர்க்கபயமீவிரருளியவளவில்செல்வம்
தொடர்ந்துநும்பணியிற்றீர்ந்தாலதுவுநுந்தொழிலேயன்றே
மடந்தைதன்பொருட்டால்வந்தவாளமர்க்களத்துமாண்டு
கிடந்திலரென்னிற்பின்னுநிற்குமோகேண்மையம்மா. (ருஎ)

செம்மைசேருள்ளத்தீர்கள்செய்தபேருதவிதீரா
வெம்மைசேர்பகையுமாற்றியரசுவீற்றிருக்கவிட்டீர்
உம்மையேயிகழ்வாரென்னினெளிமையாயொழிவதொன்றே
இம்மையேவறுமையெய்தியிருமையுமிழப்பரன்றே. (ருஅ)

ஆண்டுபோர்வாலியாற்றன்மாற்றியதம்பொன்றாயின்
வேண்டுமோதுணைவர்நும்பால்வில்லினுமிக்கதுண்டோ
தேண்டுவார்த்தேடுகின்றீர்தேவியையதனைச்செவ்வே
பூண்டுநின்றுய்தற்பாலார்நுங்கழல்புகுந்துளோரும். (ருகூ)

என்றவளுரைத்தமாற்றம்யாவையுமினிதுகேட்டு
நன்றுணர்கேள்வியாளனருள்வரநாணுட்கொண்டான்
நின்றனனிற்றலோடுநீத்தனன்முனிவென்றுன்னு
வன்றுணைவயிரத்திண்டோண்மாருதிமருங்கின்வந்தான். (சூ0)

வந்தடிவணங்கிநின்றமாருதிவதனநோக்கி
அந்தமில்கேள்விநீயுமயர்த்தனையாகுமன்றே
முந்தினசெய்கையென்றான்முனிவினுமுனைக்குமன்பான்
எந்தைகேட்டருளுகென்னுவியம்பினனியம்பவல்லான். (சூக)

சிதைவகல்காதற்றாயைத்தந்தையைக்குருவைத்தெய்வ
பதவியந்தணரையாவைப்பாலரைப்பாவைமாரை
வதைபுரிகுநர்க்குமுண்டாமாற்றலாமாற்றன்மாயா
உதவிகொன்றார்க்கென்றேனுமொழிக்கலாமுபாயமுண்டோ. (சூஉ)

அய்யநும்மோடுமெங்களரிக்குலத்தரசனோடும்
மெய்யுறுகேண்மையாகமேலைநாள்விளைவதாய
செய்கையென்செய்கையன்றேவன்னதுசிதையுமாயின்
உய்வகையெவர்க்குமுண்டோவுணர்வுமாசுண்டதன்றே. (சூங)

தேவருந்தவமுஞ்செய்யுநல்லறத்திறமுமற்றும்
யாவருநீரேயென்பதென்வயிற்கிடந்ததெந்தாய்
ஆவதுநிற்கசேருமரணுண்டோவருளுண்டன்றே
மூவகையுலகுங்காக்குமொய்ம்பினீர்முனிவுண்டானல். (சூச)

மறந்திலன்கவியின்வேந்தன்வயப்படைவருவிப்பாரைத்
திறந்திறமேவியன்னான்செம்மையிற்சிறியனன்னன்
அறந்துணைநுமக்குத்தான்றன்வாய்மையையழிக்குமாயின்
பிறந்திலனன்றேயன்றேநரகமும்பிழைப்பதன்றால். (சூரு)

உதவாமலொருவன்செய்தவுதவிக்குக்கைம்மாறாக
மதவானையனையமைந்தமற்றுமுண்டாகவற்றோ
சிதையாதசெருவிலன்னான்முன்சென்றுசெறுநர்மார்பின்
உதையானேனுதையுண்டாவியுலையானேனுலகின்மன்னோ. (சுசு)

ஈண்டினிநிற்றலென்பதினியதோரியல்பிற்றன்றால்
வேண்டலரறிவரேனுங்கேண்மைதீர்வினையிற்றாமால்
ஆண்டகையாளிமொய்ம்பினையநீரளித்தசெல்வம்
காண்டியாலுன்முன்வந்தகவிக்குலக்கோனொடென்றான். (சுஎ)

மாருதிமாற்றங்கேட்டமலைபுரைவயிரத்தோளான்
தீர்வினைசென்றுநின்றசீற்றத்தான்சிந்தைசெய்தான்
ஆரியனருளிற்றீர்ந்தாரல்லர்வந்தடுத்தசெல்வம்
பேரரிதாகச்செய்தசிறுமையானென்னும்பெற்றி. (சுஅ)

அனையதுகருதிப்பின்னரரிக்குலத்தவனைநோக்கி
நினையொருமாற்றமின்னேநிகழ்த்துவதுளதுநின்பால்
இனையனவுரைத்தற்கேற்றவெண்ணுதியிவைநீயென்னா
வனைகழல்வயிரத்திண்டோண்மன்னிளங்குமரன்சொல்வான். (சுகூ)

தேவியைக்குறித்துச்செய்தசீற்றமுமானத்தீயும்
ஆவியைக்குறித்துநின்றதையனையதனைக்கண்டேன்
கோவியற்றருமநீங்கக்கொடுமையோடுறவுகூடிப்
பாவியர்க்கேற்றசெய்கைகருதுவல்பழியும்பாரேன். (எ0)

ஆயினுமென்னையானேயாற்றினின்றாவியுற்று
நாயகன்றனையுந்தேற்றநாள்பலகழிந்தவன்றேல்
தீயுமிவ்வுலகமூன்றுந்தேவரும்வீவரொன்றோ
வீயுநல்லறமும்போகாவிதியதுவிலக்கற்பாலார். (எக)

உன்னைக்கண்டுங்கோன்றன்னையுற்றிடத்துதவும்பெற்றி
என்னைக்கண்டன்னதோர்ந்திந்நாளிடைநெடிதுவைகித்
தன்னைக்கொண்டிருந்தேதாழ்த்தானன்றெனிற்றனுவொன்றாலே
மின்னைக்கண்டனையாடன்னைநாடுதல்விலக்கற்பாற்றோ. (எஉ)

ஒன்றுமோவானமின்றியுலகமும்பதினாலுள்ள
வென்றிமாக்கடலுமேழ்மலையுள்ளவென்னவேயாய்
நின்றதோரண்டத்துள்ளேயெனினதுநெடியதொன்றோ
அன்றுநீர்சொன்னமாற்றந்தாழ்வித்தறருமமன்றால். (எங)

தாழ்வித்தீரல்லீர்பன்னாடருக்கியவரக்கர்தம்மை
வாழ்வித்தீரிமையோர்க்கின்னல்வருவித்தீர்மரபிற்றீராக்
கேள்வித்தீயாளர்துன்பங்கிளர்வித்தீர்பாவந்தன்னை
மூள்வித்தீர்முனியாதானைமுனிவித்தீர்முடிதிரென்றான். (எச)

தோன்றலஃதுரைத்தலோடுமாருதிதொழுதுதொல்லை
ஆன்றநூலறிஞுபோயபொருண்மனத்தடைப்பாயல்லை
ஏன்றதுமுடியேயென்னினிறத்துமித்திறத்துக்கெல்லாம்
சான்றெனவறவோய்போந்துன்றம்முனைச்சார்தியென்றான். (எரு)

முன்னுநீசொல்லிற்றன்றோமுயன்றதுமுயற்சிதானும்
இன்னுநீயிசைத்தசெய்வானியைந்தனமென்றுகூறி
அன்னதோரமைதியான்றனருள்சிறிதறிவானோக்கிப்
பொன்னின்வார்சிலையினானுமாருதியோடும்போனான். (எசு)

அயில்விழிக்குமுதச்செவ்வாய்ச்சிலைநுதலன்னப்போக்கின்
மயிலியற்கொடித்தேரல்குன்மணிநகைத்திணிவேய்மென்றோட்
குயின்மொழிக்கலசக்கொங்கைமின்னிடைக்குமிழேர்மூக்கின்
புயலியற்கூந்தன்மாதர்குழாத்தொடுந்தாரைபோனாள். (எஎ)

வல்லமந்திரியரோடுவாலிகாதலனுமைந்தன்
அல்லியங்கமலமன்னவடிபணிந்தச்சந்தீர்ந்தான்
வில்லியுமவனைநோக்கிவிரைவினென்வரவுவீர
சொல்லுதிநுந்தைக்கென்றானன்றெனத்தொழுதுபோனான். (எஅ)

போனபின்றாதைகோயில்புக்கவன்பொலங்கொள்பாதம்
தானுறப்பற்றிமுற்றுந்தைவந்ததடக்கைவீரன்
மானவற்கிளையோன்வந்துன்வாசலின்புறத்தான்சீற்றம்
மீனுயர்வேலைமேலும்பெரிதிதுவிளைந்ததென்றான். (எகூ)

அறிவுற்றுமகளிர்வெள்ளமனைவருமவனைப்பற்றிப்
பிறிவற்றமயக்கத்தான்முந்துற்றதோர்பெற்றியோரான்
செறிபொற்றாரலங்கல்வீரசெய்திலங்குற்றநம்மைக்
கறுவுற்றபொருளுக்கென்னோகாரணங்கண்டதென்றான். (அ0)

இயைந்தநாளெல்லைநீசென்றெய்தலைசெல்வமெய்தி
வியந்தனையுதவிகொன்றாய்மெய்யிலையென்னவீங்கி
உயர்ந்ததுசீற்றமற்றதுற்றதுசெய்கைதானும்
நயந்தெரியநுமன்வேண்டாநல்கினனம்மையின்னும். (அக)

வருகின்றவேகநோக்கிவானரவீரர்வானைப்
பொருகின்றநகரவாயிற்பொற்கதவடைத்துக்கார்க்குன்
றருகொன்றுமில்லாவண்ணம்வாங்கினரடுக்கிமற்றும்
தெரிகின்றசினத்தீபொங்கச்செருச்செய்வானமைந்துநின்றார். (அஉ)

ஆண்டகையதனைநோக்கியம்மலர்க்கமலத்தாளிற்
றீண்டினன்றீண்டாமுன்னந்தெற்கொடுவடக்குத்தெய்வ
நீண்டகன்மதிலுங்கொற்றவாயிலுநிரைத்தகுன்றும்
கீண்டனதகர்ந்துபின்னைப்பொடியொடுங்கெழீஇயவன்றே. (அங)

அந்நிலைகண்டதிண்டோளரிக்குலத்தனிகமம்மா
எந்நிலையுற்றதென்கேன்யாண்டுபுக்கொளித்ததென்கேன்
இந்நிலைகண்டவன்னையேந்திழையாயத்தோடு
மின்னிலைவேலினானைவழியெதிர்விலக்கினின்றாள். (அச)

மங்கையர்மேனிநோக்கான்மைந்தனுமனத்துவந்த
பொங்கியசீற்றம்பற்றிப்புகுந்திலன்பொருமிநின்றான்
நங்கையுமினிதுகூறிநாயகாடந்ததென்னோ
எங்கள்பாலென்னச்சொன்னாளண்ணலுமினையசொன்னான். (அரு)

அதுபெரிதறிந்தவன்னையன்னவன்சீற்றமாற்றி
விதிமுறைமறந்தானல்லன்வெஞ்சினச்சேனைவெள்ளம்
கதுமெனக்கொணருந்தூதுகல்லதர்செல்லவேவி
எதிர்முறையிருந்தானென்றாளிதுவிங்குப்புகுந்ததென்றான். (அசு)

சொற்றலுமருக்கன்றோன்றல்சொல்லுவான்மண்ணின்விண்ணின்
நிற்குறியார்கள்யாவரனையவர்சினத்தினேர்ந்தால்
விற்குரியாரித்தன்மைவெகுளியின்விரைவினெய்தின்
எற்குரையாதுநீரீதியற்றியதென்கொலென்றான். (அஎ)

உணர்த்தினேன்முன்னர்நீயஃதுணர்ந்திலையுணர்விற்றீர்ந்தாய்
புணர்ப்பதொன்றின்மைநோக்கிமாருதிக்குரைப்பான்போனேன்
இணர்த்தொகையீன்றபொற்றாரெறுழ்வலித்தடந்தோளெந்தாய்
கணத்திடையவனைநீயுங்காணுதல்கருமமென்றான். (அஅ)

உறவுண்டசிந்தையானுமுரைசெய்வானொருவர்க்கின்னும்
பெறலுண்டேயவராலீண்டியான்பெற்றபேருதவியுற்ற
திறலுண்டோவென்னிற்றீர்வாரிறந்தபேரிடரையெல்லாம்
நறவுண்டுமறந்தேன்காணநாணுவெனம்பவென்றான். (அகூ)

ஏயினவிதுவலான்மற்றேழைமைப்பாலதென்னோ
தாயிவண்மனைவியென்னுந்தெளிவன்றேற்றருமமென்னும்
தீய்வினையைந்தினொன்றாமன்றியுந்திருக்குநீங்கா
மாயையின்மயங்குகின்றாமயக்கின்மேன்மயக்கும்வைத்தாம். (கூ0)

தெளிந்துதீவினையைத்தீர்ந்தோர்பிறவியைத்தீர்வரென்னு
விளிந்திலாவுணர்வினோரும்வேதமும்விளம்பவேயும்
நெளிந்துறைபுழுவைநீக்கிநறவுண்டுநிறைநின்றேனுல்
அளிந்தகத்தெரியுந்தீயைநெய்யினாலவிக்கின்றாமால். (கூக)

தன்னைத்தானுணரத்தீருந்தகையறுபிறவியென்ப
தென்னைத்தான்மறையுமற்றதுறைகளுமிசைத்தவெல்லாம்
முன்னைத்தான்றன்னையோராமுழுப்பிணியழுக்கின்மேலே
பின்னைத்தான்பெறுவதம்மாநறவுண்டுதிகைக்கும்பித்தோ. (கூஉ)

அளித்தவரஞ்சுநெஞ்சினடைந்தவரறிவுமூழ்கிக்
குளித்தவரின்பதுன்பங்குடைந்தவர்குடைந்தவேரி
ஒளித்தவருண்டுமீண்டிவ்வுலகெலாமுணரவோடிக்
களித்தவரெய்திநின்றகதியொன்றுகண்டதுண்டோ. (௯௩)

செற்றதும்பகைஞர்நட்டார்செய்தபேருதவிதானும்
கற்றதுங்கண்கூடாகக்கண்டதுங்கலைவலாளர்
சொற்றதுமானம்வந்துதொடர்ந்ததும்படர்ந்ததுன்பம்
உற்றதுமுணராராயினிறுதிவேறிதனினுண்டோ. (௯௪)

வஞ்சமுங்களவும்பொய்யுமயக்கமுமரபில்கோட்டும்
தஞ்சமென்றுரைநீக்குந்தன்மையுங்களிப்புந்தாக்கும்
கஞ்சமெல்லணங்குந்தீருங்கள்ளினாலருந்தினாரை
நஞ்சமுங்கொல்வதல்லானரகினைநல்காதன்றே. (௯௫)

கேட்டனனறவாற்கேடுவருமெனக்கிடைத்தவச்சொல்
காட்டியதருமநீதிக்கல்வியாற்கடந்ததல்லால்
மீட்டினியுரைப்பதென்னேவிரைவின்வந்தடைந்தவீரன்
மூட்டியவெகுளியானுன்முடிவதற்கையமுண்டோ. (௯௬)

அய்யநானஞ்சினேனிந்நறவினினரியகேடு
கய்யினாலன்றியேயுங்கருதுதல்கருமமன்றால்
வெய்யதாமதுவையின்னும்விரும்பினேனென்னின்வீரன்
செய்யதாமரைகளன்னசேவடிசிதைக்கவென்றான். (௯௭)

என்றுகொண்டியம்பியண்ணற்கெதிர்கொளற்கியைந்தவெல்லாம்
நன்றுகொண்டின்னுநீயேநணுகெனவவனையேவித்
தன்றுணைத்தேவிமாருந்தமரொடுந்தழுவத்தானும்
நின்றனனெடியவாயிற்கடைத்தலைநிறைந்தசீரான். (௯௮)

உரைத்தசெஞ்சாந்தும்பூவுஞ்சுண்ணமும்புகையுமூழின்
நிரைத்தபொற்குடமுந்தீபசாலமுநிகழ்ந்தமுத்தும்
குரைத்தெழுவிதானத்தோடுதொங்கலுங்கொடியுஞ்சங்கும்
இரைத்துமிழ்முரசுமுற்றுமியங்கினவீதியெல்லாம். (௯௯)

தூயதிண்பளிக்கிற்செய்தசுவர்களிற்றலத்திற்சுற்றில்
நாயகமணியிற்செய்தநனிநெடுந்தூணினாப்பண்
சாயைபுக்குறலாற்கண்டோரயர்வுறக்கைவிலோடும்
ஆயிரமைந்தர்வந்தாருளரெனப்பொலிந்ததவ்வூர். (௧௦௦)

அங்கதன்பெயர்த்தும்வந்தாண்டடியிணைதொழுதானைய
எங்கிருந்தானுங்கோமானென்றலுமெதிர்கோளெண்ணி
மங்குறோய்கோயில்கொற்றக்கடைத்தலைமருங்குநின்றான்
சிங்கவேறனையவீரசெய்தவச்செல்வனென்றான். (௧௦௧)

சுண்ணமுந்தூசும்வீசிச்சூடகத்தொடிக்கைமாதர்
கண்ணகன்கவரிக்கற்றைக்காலுறக்கலைவெண்டிங்கள்
விண்ணுறவளர்ந்ததென்னவெண்குடைவிளங்கவீர
வண்ணவிற்கரத்தான்முன்னர்க்கவிக்குலத்தரசன்வந்தான். (கoஉ)

அருக்கியமுதலவாயவருச்சனைக்கமைந்தயாவும்
முருக்கிதழ்மகளிரேந்தமுரசின்முகிலினார்ப்ப
இருக்கினமுனிவரோதவிசைதிசையளப்பயாணர்த்
திருக்கிளர்செல்வநோக்கித்தேவருமருளச்சென்றான். (கoங)

வெம்முலைமகளிர்வெள்ளமீனெனவிளங்கவிண்ணில்
சும்மைவான்மதியங்குன்றிற்றோன்றியதெனவுந்தோன்றிச்
செம்மலையெதிர்கோளெண்ணித்திருவொடுமேலர்ந்தசெல்வன்
அம்மலையுதயஞ்செய்ததாதையுமனையனானான். (கoச)

வேறு. தோற்றியவரிகுலத்தரசைத்தோன்றலும்
ஏற்றெதிர்நோக்கினனெழுந்ததவ்வழி
சீற்றமங்கதுதனைத்தெளிந்தசிந்தையால்
ஆற்றினன்றருமத்தினமைதியுன்னுவான். (கoரு)

எழுவினுமலையினுமெழுந்ததோள்களால்
தழுவினரிருவருந்தழுவித்தையலார்
குழுவொடும்வீரர்தங்குழாத்தினோடும்புக்
கொழிவிலாப்பொற்குழாத்துறையுளெய்தினார். (கoசு)

அரியணையமைந்ததுகாட்டியையவீண்
டிருவெனக்கவிக்குலத்தரசனேவலும்
திருமகடலைமகன்புல்லிற்சேரவெற்
குரியதோவிஃதெனமனத்தினுன்னுவான். (கoஎ)

கல்லணைமனத்தினையுடைக்கைகேசியால்
எல்லணைமணிமுடிதுறந்தவெம்பிரான்
புல்லணைவைகயான்பொன்செய்பூத்தொடர்
மெல்லணைவைகவும்வேண்டுமோவென்றான். (கoஅ)

என்றவனுரைத்தலுமிரவிகாதலன்
நின்றனன்விம்மினன்மலர்க்கணீருகக்
குன்றெனவுயர்ந்தவக்கோயிற்குட்டிம
வன்றலத்திருந்தனன்மனுவின்கோமகன். (கoகூ)

மைந்தருமுதியருமகளிர்வெள்ளமும்
அந்தமினோக்கினரழுதகண்ணினர்
இந்தியமவித்தவரெனவிருந்தனர்
நொந்தனர்தளர்ந்தனர்நுவல்வதோர்கிலர். (ககo)

மஞ்சனவிதிமுறைமரபினடிலே
எஞ்சலினின்னமுதருந்தின்யாமெலாம்
உஞ்சனமினியெனவரசுரைத்தலும்
அஞ்சனவண்ணனுக்கநுசன்கூறுமால். (கககக)

வருத்தமும்பழியுமேவயிறுமீக்கொள
அருத்துமென்றலெமக்கினியதியாவதோர்
இருத்தியுண்டாயினுமவலர்தான்றழீஇக்
கருத்துவேறுற்றபினமிழ்துங்கைக்குமால். (கக உ)

மூட்டியபழியெனுமுருங்குதீயவித்
தாட்டினைகங்கைநீரரசன்றேவியைக்
காட்டினையெனினெமைக்கடலினரமிழ்
தூட்டினையாற்பிறிதுயிருமில்லையால். (ககங)

பச்சிலைகிழங்குகாய்பரமனுங்கிய
மிச்சிலேநுகர்வதுவேறுதானென்று
நச்சிலேனச்சினேனுயினுயுண்ட
எச்சிலேயதுவிதற்கேதுவில்லையால். (ககச)

அன்றியுமொன்றுளதையயானினிச்
சென்றனனென்கொணர்ந்திடைதிருத்தினலது
நன்றுணைக்கோமகனுகர்வதாதலான்
இன்றிறைதாழ்த்தலுமினிதன்றமென்றன். (ககரு)

வானரவேந்தனுமினிதின்வைகுதற்
கியானதுதலைமகனிடரின்வைகவே
ஆனதுகூரக்கினத்தெமர்கட்காமென
மேனிலையழிந்துயிர்விம்மினனரோ. (ககசு)

எழுந்தனன்பொருக்கெனவிரவிகான்மூளை
விழுந்தகண்ணீரினன்வெறுத்தவாழ்வினன்
அழிந்தயர்சிந்தையனநுமற்காண்டொன்று
மொழிந்தனன்வரன்முறைபோதன்முன்னுவான். (ககஎ)

போயினதூதரிற்புகுதுஞ்சேனையை
நீயுடன்கொணருதிநெறிவலோயென
ஏயினனநுமனையிருத்தியீண்டென
நாயகனிருந்துழிக்கடிதுநண்ணுவான். (ககஅ)

அங்கதனுடன்செலவரிகண்முன்செல
மங்கையருள்ளமும்வழியும்பின்செலச்
சங்கையிலிலக்குவற்றழுவித்தம்முனிற்
செங்கதிரோன்மகன்கடிதுசென்றனன். (ககக)

ஒன்பதினுயிரகோடியூகந்தன்
முன்செலப்பின்செலமருங்குமொய்ப்புற
மன்பெருங்கிளைஞருமருங்குசுற்றுற
மின்பொருபூணினுன்செல்லும்வேலையில். (கஉ0)

கொடிவனமிடைந்தனகுமுறுபேரியின்
இடிவனமிடைந்தனபணிலமேங்கின
தடிவனமிடைந்தனதயங்குபூணொளி
கொடிவனமெழுந்தனவானம்போர்த்தவே. (கஉக)

பொன்னினின்முத்தினிற்புனைமென்றூசினில்
மின்னினமணியினிற்பளிங்கில்வெள்ளியில்
பின்னினவிசும்பினும்பெரியபெட்புறத்
துன்னினசிவிகைவெண்கவிகைசுற்றின. (கஉஉ)

வீரனுக்கிளையவன்விரும்புசேவடி
பாரினிற்சேறலிற்பரிதிமைந்தனும்
தாரினிற்பொலன்கழறழங்கத்தாரணித்
தேரினிற்சென்றனன்சிவிகைபின்செல. (கஉங)

எய்தினன்மானவனிருந்தமால்வரை
நொய்தினிற்சேனைபின்பொழியநோன்கழல்
அய்யவிற்குமரனுந்தானுமங்கதன்
கய்தொடர்ந்தயல்செலக்காதன்முன்செல. (கஉச)

கண்ணியகணிப்பருஞ்செல்வக்காதல்விட்
டண்ணலையடிதொழவணையுமன்பினல்
நண்ணியகவிக்குலத்தரசனுடொறும்
புண்ணியற்றெழுகழற்பரதன்போன்றனன். (கஉரு)

பிறிவருந்தம்பியும்பிரியப்பேருல
கிறுதியிற்றனெனவிருந்தவேந்தலை
அறைமணித்தாரினேடாரம்பார்தொடச்
செறிமலர்ச்சேவடிமுடியிற்றீண்டினன். (கஉசு)

தீண்டலுமார்பிடைத்திருவுநோவுற
நீண்டபொற்றடக்கையானெடிதுபுல்லினன்
மூண்டெழுவெகுளிபோயொளிப்பமுன்புபோல்
ஈண்டியகருணைதந்திருக்கையேவியே. (கஉஎ)

அயலினிதிருத்தினின்னரசுமாணையும்
இயல்பினினியைந்தவேயினிதின்வைகுமே
புயல்பொருதடக்கைநீபுரக்கும்பல்லுயிர்
வெயிலிலதேகுடையெனவிளம்பினன். (கஉஅ)

பொருளுடையவ்வுரைகேட்டபோழ்துவான்
உருளுடைத்தேரினோன்புதல்வனூழியின்
இருளுடையுலகினுக்கிரவியன்னநின்
அருளுடையேற்கவையரியவோவெனா. (கஉ.கூ)

பின்னரும்விளம்புவான்பெருமையோய்நின
தின்னருளுதவியசெல்வமெய்தினேன்
மன்னவனின்பணிமறுத்துவைகியென்
புன்னிலைக்குரக்கியல்புதுக்கினேனென்றான். (கந0)

பெருந்திசையனைத்தையும்பிசைந்துதேடினென்
தருந்தகையமைத்துமத்தன்மைசெய்திலேன்
திருந்திழைதிறத்தினாற்றெளிந்தசிந்தைநீ
வருந்தினையிருக்கயான்வாழ்வின்வைகினேன். (கநக)

இனையனயானுடையியல்புமெண்ணமும்
நினைவுமென்றாலினின்றுநான்செயும்
வினையுநல்லாண்மையும்விளம்பவேண்டுமோ
வனைகழல்வரிசி[illegible]வள்ளியோயென்றான். (கநஉ)

திருவுறைமார்பனுந்தீர்ந்ததேயும்வந்
தொருவருங்காலமுன்னுரிமையோருரை
தருவினைத்தாகையிற்றாழ்வித்தாகுமோ
பரதனீயினையனபகரற்பாலையோ. (கநந)

ஆரியன்பின்னருமமைந்துநன்குணர்
மாருதியெவ்வழிமருவினானெனச்
சூரியன்கான்முளைதோன்றுமாலவன்
நீரரும்பரவையினெடிதுசேனையான். (கநச)

கோடியோராயிரங்குறித்ததூதுவர்
ஓடினர்நெடும்படைகொணரலுற்றதால்
நாடரக்குறித்ததுமின்றுநாளையவ்
வாடலந்தானையோடவனுமெய்துமால். (கநரு)

ஒன்பதினாயிரகோடியுற்றது
நின்பெருஞ்சேனையந்நெடியசேனைக்கும்
நன்பெயரவதிநாளைநண்ணிய
பின்செயத்தக்கதுபேசற்பாற்றென்றான். (கநசு)

விரும்பியவிராமனும்வீரநிற்கதோர்
அரும்பொருளாகுமோவமைதிநன்றெனாப்
பெரும்பகலிறந்ததுபெயர்திநின்படை
பொருந்துதியெனவவன்றொழுதுபோயினான். (கநஎ)

அங்கதற்கினியனவருளியையபோய்த்
தங்குதியுந்தையோடென்றுதாமரைச்
செங்கணுன்றம்பியுந்தானுஞ்சிந்தையின்
மங்கையுமவ்வழியன்றுவைகினுன். (கஙஅ)

சேயுயர்கீர்த்தியான்கதிரின்செம்மல்பால்
போயதுமவ்வயிற்புகுந்தயாவையும்
ஓய்வுறுதுணர்த்தெனவுணர்த்தினுனரோ
வாய்மையாவுணர்வுறுவலியமொய்ம்பினேன். (கஙகூ)

அன்றவணிறுத்தனனலரிகீட்டிசைப்
பொன்றிணிநெடுவரைபொலிவுறுதமுன்
வன்றிறற்றூதுவர்கூவவானரக்
குன்றுறழ்நெடும்படையடைந்தகூறுவாம். (கசo)

கிட்கிந்தைப்படலம்முற்றிற்று, ஆ திருவிருத்தம் - எகசு.

---

## கக-ஆவது. தானைகாண்படலம்.

---

ஆனையாயிரமாயிரத்தெறுழ்வலிக்கமைந்த
வானராதிபராயிரருடன்வரவகுத்த
கூனன்மாக்குரங்கையிரண்டாயிரகோடித்
தானையோமேச்சதவலியென்பவன்சார்ந்தான். (க)

ஊன்றிமேருவையெடுக்குறுமிடுக்கினுக்குரிய
தேன்றெரிந்துண்டுதெளிவுறுவானரச்சேனை
ஆன்றபத்துநூறுயிரகோடியோடமையத்
தோன்றினுன்வந்துசுசேடணனெனும்பெயர்த்தோன்றல். (உ)

ஈறில்வேலையையிமைப்புறுமளவினிற்கலக்கிச்
சேறுகாண்குறுந்திறல்கெழுவானரச்சேனை
ஆறெணுயிரகோடியதுடன்வரவமிழ்தம்
மாறிலாமொழியுருமையைப்பயந்தவன்வந்தான். (ஙு)

ஐம்பதாயநூறுயிரகோடியெண்ணமைந்த
மொய்ம்புமால்வரைபுரைநெடுவானரமொய்ப்ப
இம்பர்ஞாலத்தும்வானத்துமெழுதியசீர்த்தி
நம்பனைத்தந்தகேசரிகடலெனநடந்தான். (சு)

மண்கொள்வாளெயிற்றேனத்தின்வலியெனவயிரத்
திண்கொண்மால்வரைமயிர்ப்புறத்தனவெனத்திரண்ட
கண்கொளாயிரகோடியினிரட்டியிற்கணித்த
எண்கினீட்டங்கொண்டெறுழ்வலியிடும்பன்வந்திறுத்தான். (ரு)

முனியுமாமெனினருக்கனைமுரணையுமுருக்கும்
தனிமைதாங்கியவுலகையுஞ்சலம்வரிற்சுமைக்கும்
இனியமாக்குரங்கீரிரண்டாயிரகோடி
அணிகமுன்வரவான்பெயர்க்கண்ணன்வந்தடைந்தான். (௬)

தனிவருந்தடங்கிரியெனப்பெரியவன்சலத்தால்
நினையுநெஞ்சிறவுருமெனவுறுக்குறுநிலையன்
பனசனென்பவன்பன்னிரண்டாயிரகோடிப்
புனிதவெஞ்சினவானரப்படைகொடுபுகுந்தான். (௭)

இடியுமாக்கடன்முழக்கமும்வெருக்கொளவிசைக்கும்
முடிவில்பேருறுக்குடையனவிசையனமுரண
கொடியகூற்றையுமொப்பனபதிற்றைந்துகோடி
நெடியவானரப்படைகொண்டுபுகுந்தனனீலன். (௮)

மாகரத்தனவுரத்தனவலியனநிலைய
வேகரத்தவெங்கண்ணுமிழ்வெயிலனமலையின்
ஆகரத்தினும்பெரியனவாறைந்துகோடி
சாகரத்தொடுததிமுகனென்பவன்சார்ந்தான். (௯)

இளைத்துவேறொருமாநிலம்வேண்டுமென்றிரங்க
முளைத்தமுப்பதினுயிரகோடியின்முற்றும்
விளைத்தவெஞ்சினத்தரியினம்வெருவுறவிரிந்த
அளக்கரோமெக்கயனெனும்பெயரன்வந்தடைந்தான். (௧௦)

ஆயிரத்தறுநூறுகோடியிற்கடையமைந்த
பாயிரப்பெரும்படைகொண்டுபேரவையிற்றிரையில்
தாயுருத்துடனேவரத்தடநெடுவரையை
ஏயுருப்புயச்சாம்பனென்பவனும்வந்திறுத்தான். (௧௧)

வருத்ததாமரைமலரயனிசிசரர்வாணாள்
உருத்திநீயெனப்பொருவரும்பெருவலியுடையான்
பகுத்தபத்துநூறுயிரப்பத்தியினிரட்டி
தொகுத்தகோடிவெம்படைகொண்டுதுன்முகன்றொடர்ந்தான் (௧௨)

கோடிகோடிநூறுயிரவெண்ணெனக்குவிந்த
நீடுவெஞ்சினத்தரியினமிருபுடைநெருங்க
மூடுமும்பருமிம்பரும்பூழியின்மூழ்கத்
தோடிவர்ந்ததார்க்கிரிபுரைதுமிந்தனுந்தொடர்ந்தான். (௧௩)

இயைந்தபத்துநூறுயிரப்பத்தெனுங்கோடி
உயர்ந்தவெஞ்சினவானரப்படையொடுமொருங்கே
சயந்தனக்கொருவடிவெனத்திறல்கொடுதழைத்த
மயிந்தன்மற்கசகோமுகன்றன்னொடும்வந்தான். (௧௪)

கறங்குபோல்வனகாற்றினுங்கூற்றினுங்கடிய
பிறங்குதெண்டிரைக்கடல்புடைபெயர்ந்தெனப்பெயர்வ
மறங்கொள்வானரமொன்பதுகோடியெண்வகுத்த
திறங்கொள்வெஞ்சினப்படைகொடுகுமுதனுஞ்சேர்ந்தான். (க௫)

ஏழினேழுநூறுயிரகோடியென்றிசைந்த
பாழிநன்னெடுந்தோள்கிளர்படைகொண்டுபரவை
ஊழிபேரினுமுலைவிலவுலகினிலுயர்ந்த
பூழிவிண்புகப்பதுமுகனென்பவன்புகுந்தான். (க௬)

ஏழுமேழுமென்றுரைக்கின்றவுலகங்களெவையும்
தாழுங்காலத்துந்தாழ்விலாத்தடவரைக்குலங்கள்
சூழுந்தோற்றத்தவலிகொடொள்ளாயிரகோடிப்
பாழிவெம்புயத்தரியொடுமிடபனும்படர்ந்தான். (க௭)

தீர்க்கபாதனும்வினதனுஞ்சரபனுந்திரைக்கும்
ஆர்க்கருங்கடற்குயர்ந்துளமைம்முகத்தனீகம்
ஆர்க்குமெண்ணருங்கோடிகொண்டண்டமும்புறமும்
போர்க்கும்பூழியின்மறைதரமுறையினிற்புகுந்தார். (க௮)

* கய்யஞ்சாசரமுடையவக்கடவுளைக்கண்டு
மெய்யஞ்சாதவன்மாதிரஞ்சிறிதெனவிரிந்த
வய்யஞ்சாய்வரத்திரிதருவானரச்சேனை
அய்யஞ்சாயிரகோடிகொண்டநுமன்வந்தடைந்தான். (க௯)

நொய்திற்கூடியசேனைநூறுயிரகோடி
எய்தத்தேவருமென்கொலோமுடிவென்பதெண்ண
மய்யற்சிந்தையாலந்தகன்மறுக்குற்றுமயங்கத்
தெய்வத்தச்சன்மெய்த்திருநெடுங்காதலன்சேர்ந்தான். (உ0)

கும்பனுங்குலச்சங்கனுமுதலினர்குரங்கிற்
றம்பெரும்படைத்தலைவர்கடரவந்ததானை
இம்பர்நின்றவர்க்கெண்ணரிதிராகவனுமத்
தம்பெனுந்துணைக்குரியமாறுரைப்பரிதளவே. (உக)

தோயினூழியோரேழுநீர்சுவறிவெண்டுகளாம்
சாயினண்டமுமேருவுமொருங்குடன்சாயும்
ஏயின்மண்டலமெள்ளிடவிடமின்றிவிரியும்
காயின்வெங்கனற்கடவுளுமிரவியுங்கரியும். (உஉ)

எண்ணினூன்முகரெழுபதினுயிரர்க்கியலா
உண்ணினண்டங்களோர்பிடியுண்ணவுமுதவா
கண்ணினேக்குறிற்கண்ணுதலானுக்குங்கதுவா
மண்ணின்மேல்வந்தவானரச்சேனையின்வரம்பே. (உ௩)

---

* கய்யஞ்சாயுதமுடையவென்றும்பாடம்.

ஒடிக்குமேல்வடமேருவைவேரொடுமொடிக்கும்
இடிக்குமேனெடுவானகமுகட்டையுமிடிக்கும்
பிடிக்குமேற்பெருங்காற்றையுங்கூற்றையும்பிடிக்கும்
குடிக்குமேற்கடலேழையுங்குடங்கையிற்குடிக்கும். (உச)

ஆறுபத்தெழுகோடியர்வானரர்க்கதிபர்
கூறுதிக்கினுக்கப்புறங்குப்புறற்குரியார்
மாறில்கொற்றவனினைத்தனமுடிக்குறும்வலியர்
ஊறுமிப்பெருஞ்சேனைகொண்டெளிதின்வந்துற்றார். (உரு)

ஏழுமாகடற்பரப்பினும்பரப்பெனவிசைப்பச்
சூழும்வானரப்படையொடவ்வீரருந்துவன்றி
ஆழிமாபரித்தேரவன்காதலனடிகள்
வாழிவாழியென்றுரைத்தலர்தூவினர்வணங்கி. (உசு)

அனையதாகியசேனைவந்திறுத்தலுமருக்கன்
தனையனெய்தினிற்றயரதன்புதல்வனைச்சார்ந்தான்
நினையுமுன்னம்வந்தடைந்ததுநின்பெருஞ்சேனை
வினையின்கூற்றுவகண்டருணீயெனவிளம்பும். (உஎ)

அய்யனும்முவந்தகமெனமுகமலர்ந்தருளித்
தய்யலாள்வரக்கண்டனனுமெனத்தளிர்ப்பான்
எய்தினனங்கொர்நெடுவரைச்சிகரத்தினிருக்கை
வெய்யவன்மகன்பெயர்த்துமச்சேனையின்மீண்டான். (உஅ)

அஞ்சொடையிரண்டியோசனையகலத்ததாகிச்
செஞ்செவேவடதிசைநின்றுந்தென்றிசைச்செல்ல
எஞ்சலில்பெருஞ்சேனையையெழுகெனவேவி
வெஞ்சினப்படைவீரரையுடன்கொண்டுமீண்டான். (உகூ)

மீண்டிராமனையடைந்திகல்வென்றிவேல்வீர
காண்டிநீயெனவரன்முறைதெரிவுறக்காட்டி
ஆண்டிருந்தவனுதரந்துவகையினுடி
ஈண்டுசேனைபாலெறிகடனெறிபடர்ந்தென்ன. (௩௦)

எட்டுத்திக்கையுமிருநிலப்பரப்பையுமிமையோர்
வட்டவிண்ணையுமறிகடலனைத்தையுமறையத்
தொட்டுமேலெழுந்தோங்கியதூளியின்பூழி
அட்டிச்செம்பியனிறைகுடமொத்ததவ்வண்டம். (௩க)

அத்தியொப்பெனினன்னவையுணர்ந்தவருளரால்
வித்தகர்க்கினியுரைக்கலாமுவமைவேறியாதோ
பத்திரட்டிநன்பகலிரவொருவலர்பார்ப்பார்
எத்திறத்தினுநடுவுகாண்கிலர்முடிவெவனோ. (௩உ)

விண்ணிற்றென்கடலுலகத்தினுகரின்வெற்றி
எண்ணிற்றுனலதொப்பிலனெனகின்றவிராமன்
கண்ணிற்சிந்தையிற்கல்வியின்ஞானத்திற்கருதி
அண்ணற்றம்பியைநோக்கினனுரைசெய்வதானுன். (௩௩)

அடல்கொண்டோங்கியசேனைக்குநாமுநம்மறிவால்
உடல்கண்டோமினிமுடிவுளகாணுமாறுளதோ
மடல்கொண்டோங்கியவலங்கலான்மண்ணிடைமாக்கள்
கடல்கண்டோமென்பர்யாவரேமுடிவுறக்கண்டார். (௩௪)

ஈசன்மேனியையீரைந்துதிசைகளையீண்டிவ்
வாசில்சேனையையம்பெரும்பூதத்தையறிவைப்
பேசும்பேச்சினைச்சமயங்கள்பிணக்குறும்பிணக்கை
வாசமாலையாயாவரேமுடிவெண்ணவல்லார். (௩௫)

இன்னசேனையைமுடிவுறவிருந்திவணெக்கிப்
பின்னைக்காரியம்புரிதுமேனுள்பலபெயரும்
முன்னைச்செய்கைமேலொருப்படலுறுவதேயுறுதி
என்னவீரனைக்கைதொழுதிளையவனியம்பும். (௩௬)

யாவதெவ்வுலகத்தினினிங்கிவர்க்கியற்றல்
ஆவதாகுவதரியதொன்றுளதெனலாமே
தேவதேவியைத்தேடுவதென்பதுசிறிதால்
பாவந்தோற்றதுதருமமேவென்றதிப்படையால். (௩௭)

தரங்கநீரெழுதாமரைநான்முகன்றந்த
வரங்கொள்பேருலகத்தினின்மற்றைமன்னுயிர்கள்
உரங்கொண்மால்வரையுயிர்படைத்தெழுந்தனவொக்கும்
குரங்கின்மாப்படைக்குறையிடப்படைத்தனன்கொல்லாம். (௩௮)

ஈண்டுதாழ்க்கின்றதென்னினியெண்டிசைமருங்கும்
தேண்டுவார்களைவல்லையிற்செலுத்துவதல்லால்
நீண்டநூல்வலாயென்றனனிளையவனெடியோன்
பூண்டதேரவன்காதலற்கொருமொழிபுகலும். (௩௯)

தானைகாண்படலம்முற்றிற்று. ஆ திருவிருத்தம்-எ௫௩.

---

## க௨-ஆவது. நாடவிட்டபடலம்.

---

வகையுமானமுமாறெதிர்ந்தாற்றுறும்
பகையுமின்றிநிரைந்துபரந்தெழும்
தகைவில்சேனைக்கமைதிசமைந்ததோர்
தொகையுமுண்டுகொலோவெனச்சொல்லினுன். (க)

ஏற்றவெள்ளமெழுபதினிற்றவென்
றாற்றலாளரறிவினமைந்ததோர்
மாற்றமுண்டதுவல்லதுமற்றுமோர்
தோற்றமென்னிதற்கென்றுமுன்சொல்லுமோ. (௨)

ஆறுபத்தெழுகோடியனீகருக்
கேறுகொற்றத்தலைவரிவர்க்குமுன்
கூறுசேனைப்பதிகொடுங்கூற்றையும்
நீறுசெய்திடுநீலனென்றோதினான். (௩)

என்றுரைத்தவெரிகதிர்மைந்தனை
வென்றிவிற்கையிராமன்விருப்பினான்
நின்றினிப்பலபேசியென்னோநெறி
சென்றிழைப்பனசிந்தனைசெய்கென்றான். (௪)

அவனுமண்ணலநுமனையையநீ
புவனமூன்றுநின்றாதையிற்புக்குழல்
தவனவேகத்தையோர்கிலைதாழ்த்தனை
கவனமாக்குரங்கின்செயல்காண்டியோ. (௫)

ஏகியேந்திழைதன்னையிருந்துழீஇ
நாகநாடுகநானிலனாடுக
போகபூமிபொருந்திடவல்லநின்
வேகமீண்டுவெளிப்படவேண்டுமால். (௬)

தென்றிசைக்கணிராவணன்சேணகர்
என்றிசைக்கின்றதென்னறிவின்னணம்
வன்றிசைக்கினிமாருதிநீயலால்
வென்றிசைக்குரியார்பிறர்வேண்டுமோ. (௭)

வள்ளறேவியைவஞ்சித்துவெளவிய
கள்ளவாளரக்கன்செலக்கண்டது
தெள்ளியோயதுதென்றிசையென்பதோர்
உள்ளமும்மெனக்குண்டெனவுன்னுவாய். (௮)

தாரைமைந்தனுஞ்சாம்பனுந்தாமுதல்
வீரர்யாவருமேம்படுமேன்மையால்
சேர்கநின்னொடுந்திண்டிறற்சேனைகள்
பேர்கவெள்ளமிரண்டொடும்பெற்றியால். (௯)

குடதிசைக்கட்சுடேணன்குபேரன்வாழ்
வடதிசைக்கட்சதவலிவாசவன்
இடதிசைக்கண்வினதன்விறற்றரு
படையொடுற்றுப்படர்கெனப்பண்ணினான். (௧௦)

வெற்றிவானரவெள்ளமிரண்டொடும்
சுற்றியோடித்துருவியொருமதி
முற்றுறாதமுன்முற்றுதிரிவ்விடை
கொற்றவாகையினீரெனக்கூறினான். (கக)

ஈண்டுநின்றிறந்தீரைந்துநூறெழில்
தூண்டுசோதிக்கொடுமுடிதோன்றலால்
நீண்டநேமிகொலாமெனநேர்தொழ
வேண்டும்விந்தமலையினைமேவுவீர். (கஉ)

தேடியவ்வழிதீர்ந்தபின்றேவரும்
ஆடுகின்றதறுபத *மைந்திணைப்
பாடுகின்றதுபன்மணிபாயிருள்
நாடுகின்றநருமதைநாடுவீர். (கங)

வாமமேகலைவானரமங்கையர்
காமவூசற்களியிசைக்கள்ளினால்
தூமமேனியசுணந்துயில்வுறும்
ஏமகூடமெனுமலையெய்துவீர். (கச)

நொய்தினம்மலைநீங்கிநுமரொடும்
பொய்கையின்கரைபிற்படப்போதிரால்
செய்யபெண்ணைக்கரியபெண்ணைச்சில
வய்கறேடிக்கடிதுவழிக்கொள்வீர். (கரு)

தாங்குவாரிற்றருவளர்சந்தனம்
வீங்குவேலிவிதர்ப்பமுமெல்லென
நீங்கிநாடுநெடியனபிற்படத்
தேங்குவார்புனற்றண்டகஞ்சேர்திரால். (கசு)

பண்டகத்தியன்வைகியதாப்பகர்
தண்டகத்ததுதாபதர்தம்மையுட்
கண்டகத்துயர்தீர்வதுகாண்டிரால்
முண்டகத்துறையென்றொருமொய்ம்பொழில். (கஎ)

ஞாலநல்லறத்தோருன்னுநற்பொருள்
போலநின்றுபொலிவதுபூம்பொழில்
சீலமங்கையர்வாயெனத்தீங்கனி
காலமின்றிக்கனிவதுகாண்டிரால். (கஅ)

நயனநன்கிமையார்துயிலார்நனி
அயனமில்லையருக்கனுக்கவ்வழி
சயனமாதர்கலவித்தலைதரும்
பயனுமின்பமுநீரும்பயக்குமால். (ககூ)

* ஐந்திணையெனவும்பாடம்.

ஆண்டிறந்துபின்னந்தரத்திந்துவைத்
தீண்டுகின்றதுசெங்கதிர்ச்செல்வனும்
ஈண்டுறைந்தலதேகலனென்பது
பாண்டுவின்மலையென்னும்பருப்பதம். (உ0)

வேறு. முத்தீர்த்துப்பொன்றிரட்டிமணியுருட்டிமுதுநீத்தமுன்றிலாயர்
மத்தீர்த்துமரனீர்த்துமலையீர்த்துமரனீர்த்துவருவதியார்க்கும்
புத்தீர்த்திட்டலையாமற்புலவர்நாடுதவுவதுபுனிதமான
அத்தீர்த்தமகன்கோதாவிரியென்பரம்மலையினருகிற்றம்மா. (உக)

அவ்வாறுகடந்தப்பாலறத்தாறேயெனத்தெளிந்தவருளினுறும்
செவ்வாறுமெனக்குளிர்ந்துவெயிலியங்காவகையியங்கும்விரிபூஞ்சோலை
எவ்வாறுமெனத்துவன்றியிருளாறுமணியிமைப்பதிமையோர்வேண்ட
தெவ்வாறுமுகத்தொருவன்றனிக்கிடந்தசுவணத்தைச்சேர்திர்மாதோ. (உஉ)

சுவணத்தைக்கடந்தப்பால்சூரியகாந்தகமென்னத்தோன்றிமாதர்
கவனுமிழ்கல்வெயிலியங்குங்கனவரையுஞ்சந்திரகாந்தகமுங்காண்பீர்
அவணவைநீத்தேகியபின்னகனுடுபலகடந்தாலநந்தனென்பான்
உவணபதிக்கொளித்துறையுங்கொங்கணமுங்குலிந்தமுஞ்சென்றுறுதிர்மாதோ

அரனதிகனுலகளந்தவரியதிகனென்றுரைக்குமறிவிலோர்க்குப்
பரகதிசென்றடைவரியபரிசேபோற்புகலரியபண்பிற்றாமால்
சுரநதியினயலதுவான்றோய்குடுமிச்சுடர்த்தொகையதொழுதோர்க்கெல்லாம்
வரனதிகந்தருந்தகையவருந்ததியாநெடுமலையைவணங்கியப்பால். (உச)

அஞ்சிவரும்வெஞ்சுரனுமாறுமகன்பெருஞ்சுனையுமகிலோங்காரம்
மஞ்சிவருநெருங்கிரியும்வளநாடும்பிற்படப்போய்வழிமேற்சென்றால்
நஞ்சுவருமிடற்றரவுக்கமிழ்துானிகொடுத்தாயைக்கலுழனண்ணும்
எஞ்சின்மரகதப்பொருப்பையிறைஞ்சியதன்புறஞ்சாரவேகிர்மாதோ. (உரு)

வடசொற்குந்தென்சொற்கும்வரம்பாகுநான்மறையுமற்றைநூலும்
இடைசொற்றபொருட்கெல்லாமெல்லையதாய்நல்லறத்துக்கீறாய்வேறு
புடைசுற்றுந்துணையின்றிப்புகழ்பொதிந்தமெய்யேபோற்பூத்துநின்ற
உடைசுற்றுந்தண்சாரலோங்கியவேங்கடத்திற்சென்றுறுதிர்மாதோ. (உசா)

இருவினையுமிடைவிடாவெவ்வினையுமியற்றாதேயிமையோரேத்தும்
திருவினையுமிடுபெதந்தேர்சிறுமையையுமுறையொப்பத்தெளிந்துநோக்கிக்
கருவினையதிப்பிறவிக்கென்றுணர்ந்தங்கதுகளையுங்கடையின்ஞானத்
தருவினையின்பெரும்பகைஞராண்டுளரீண்டிருந்துமடிவணங்கற்பாலார். (உஎ)

சூதகற்றுந்திருமறையோர்துறையாடுநிறையாறுஞ்சுருதித்தொன்னூல்
மாதவத்தோருறைவிடனுமழையுறங்குமணித்தடனும்வானமாதர்
கீதமொத்தகின்னரங்களின்னரம்புவருடுதொறுங்கிளக்குமோதை
போதகத்தின்மழக்கன்றும்புலிப்பறழுமுறங்கிடனும்பொருந்திற்றம்மா. (உஅ)

கோடுறுமால்வரையதனைக்குறுகுதிரேலுங்நெடியகொடுமைநீங்கி
வீடுறுதிராதலான்விலங்குதிரப்புறத்துணீர்மேவுதொண்டை
நாடுறுதிருற்றதனைநாடியதற்பின்னையவைநளிநீர்ப்பொன்னிச்
சேடுறுதண்புனற்றெய்வத்திருநதியினிருகரையுஞ்சேர்திர்மாதோ. (௨௯)

துறக்கமுற்றார்மனமென்னத்துறைகெழுநீர்ச்சோணாடுகடந்தாற்றொல்லை
மறக்கமுற்றாரதனையலேமறைந்துறைவரவ்வழிநீர்வல்லையேகி
உறக்கமுற்றார்கனவுற்றாரெனுமுணர்வினொடுமொதுங்கிமணியாலோங்கற்
பிறக்கமுற்றமலைநாடொடியகன்றமிழ்நாட்டிற்பெயர்திர்மாதோ. (௩௦)

தென்றமிழ்நாட்டகன்பொதியிற்றிருமுனிவன்றமிழ்ச்சங்கஞ்சேர்கிற்றீரேல்
என்றுமவனுறைவிடமாமாதலானம்மலையையிடத்திட்டேகிப்
பொன்றிணிந்தபுனல்பெருகும்பொருநையெனுந்திருநதிபின்பொழியநாகக்
கன்றுவளர்தடஞ்சாரன்மகேந்திரமாநெடுவரையுங்கடலுங்காண்டிர். (௩௧)

ஆண்டுகடந்தப்புறத்துமெப்புறத்துமொருதிங்களவதியாகத்
தேண்டியிவண்வந்தடைதிர்விடைகொடீர்கடிதென்னச்செப்பும்வேலை
நீண்டவனுமாருதியைநிறையருளாலுறநோக்கிநீதிவல்லோய்
காண்டியெனிற்கூறிகேட்டியெனவேறுகொண்டிருந்துகழறலுற்றான். (௩௨)

வேறு. பாற்கடற்பிறந்தசெய்யபவளத்தைப்பஞ்சியூட்டி
மேற்படமதியஞ்சூட்டிவிளங்குறநிரைத்தமெய்ய
காற்றகைவிரல்களையகமலமும்பிறவுங்கண்ட
ஏற்பிலவென்பதன்றியிணையடிக்குவமையென்னே. (௩௩)

நீமெயாயுணர்தியையநிரைவளைமகளிர்க்கெல்லாம்
வாய்மையாலுவமையாகமதியறிபுலவர்வைத்த
ஆமையுமென்றபோதுமல்லனசொல்லினாலும்
யாமயாழ்மழலையாடன்புறவடிக்கிழுக்கமன்றே. (௩௪)

வனைவராலரியகோதைபேதைமென்கணைக்கான்மெய்ய
நினைவராலரியவின்னநேர்படப்புலவர்போற்றும்
சினைவராற்பகழியாவநெற்சினையென்னுஞ்செப்பம்
எனைவராற்பகருமீட்டயானுரைத்தின்பமென்னே. (௩௫)

அரம்பையென்றளகமாதர்குறங்கினுக்கமைந்தவொப்பின்
வரம்பையுங்கடந்தபோதுமற்றுரைவகுக்கலாமோ
நரம்பையுமமிழ்தநாறுநறவையுநன்னீர்ப்பண்ணைக்
கரும்பையுங்கடந்தசொல்லாள்கவாற்கிதுகருதுகண்டாய். (௩௬)

வாராழிக்கலசக்கொங்கைவஞ்சிபோன்மருங்குலாடன்
தாராழிக்கலைசாரல்குற்றடங்கடற்குவமைதக்கோய்
பாராழிபிடரிற்றங்கும்பாந்தளும்பனிவென்றேங்கும்
ஓராழித்தேருங்கண்டவுனக்குநானுரைப்பதென்னே. (௩௭)

சட்டகந்தன்னைநோக்கியாரையுஞ்சமைக்கத்தக்காள்
இட்டிடையிருக்குந்தன்மையியம்பக்கேட்டுணர்தியென்னின்
கட்டுரைத்துவமைகாட்டக்கட்பொறிகதுவாகையிற்
றொட்டவெற்குணரலாமற்றுண்டெனுஞ்சொல்லுமில்லை. (௩௮)

ஆலிலைப்படிவந்தீட்டுமையநுண்பலகைநொய்ய
பால்நிறத்தட்டம்வட்டக்கண்ணடிபலவுமின்ன
போலுமென்றுரைத்தபோதும்புனைந்துரைபொதுமைபார்க்கின்
ஏலுமென்றிசைக்கினேலாவிதுவயிற்றியற்கையின்னும். (௩௯)

சிங்கலில்சிறுகூதாளிநந்தியின்றிரட்பூச்சேர்ந்த
பொங்குபொற்றொளையென்றாலும்புல்லிதுபுதுமைத்தாமால்
அங்கவளுந்தியொக்குஞ்சுழியெனக்கணித்ததுண்டால்
கங்கையைநோக்கிச்சேறிகடலினுநெடிதுகற்றாய். (௪௰)

மயிரொழுக்கெனவொன்றுண்டால்வல்லிசேர்வயிற்றின்மற்றென்
உயிரொழுக்கதற்குவேண்டுமுவமையொன்றுரைக்கவேண்டின்
செயிரில்சிற்றிடையாயுற்றசிறுகொடிநுடக்கந்தீரக்
குயிலுறுத்தமையவைத்தகொள்கொம்பென்றுணர்ந்துகோடி. (௪௧)

அல்லியூர்ந்திடுமென்றஞ்சியரவிந்தந்துறந்தாட்கம்பொன்
வல்லிமூன்றுளவாற்கோலவயிற்றின்மற்றவையுமார
வில்லிமூன்றுலகின்வாழுமாதருந்தோற்றமெய்ம்மை
சொல்லியூன்றியவாம்வெற்றிவரையெனத்தோன்றுமன்றே. (௪௨)

செப்பென்பென்கலசமென்பென்செவ்விளநீருந்தேர்வென்
துப்பொன்றுதிரள்சூதென்பென்சொல்லுவென்றும்பிக்கொம்பைத்
தப்பின்றிப்பகலின்வந்தசக்கரவாகமென்பென்
ஒப்பொன்றுமுலகிற்காணேன்பலநினைந்துலைவெனின்னும். (௪௩)

கரும்புகண்டாலுமாலைக்காம்புகண்டாலுமாலி
அரும்புகண்டாரைசோரவழுங்குவேனறிவதுண்டோ
சுரும்புகண்டாலுங்கோதைதோணினைந்துவமைசொல்ல
இரும்புகண்டனையநெஞ்சமெனக்கில்லையிசைப்பதென்னோ. (௪௪)

முன்கையேயொப்பதொன்றுமுண்டுமூன்றுலகத்துள்ளும்
என்கையேயிழுக்கமன்றேயியம்பினுங்காந்தளென்றல்
வன்கையாழ்மணிக்கையென்றன்மற்றொன்றையுணர்த்தலன்றி
நன்கையாடடக்கையாமோநலத்தின்மேனலமுண்டாமோ. (௪௫)

ஏலக்கொண்டீன்றபிண்டியிளந்தளிர்கிடக்கயாணர்
காலைக்கற்பகத்தின்காமர்குழைபடுங்கமலமென்பூ
நூலொக்குமருங்குலாடனூபுரம்புலம்புங்கோலக்
காலுக்குத்தொலையுமென்றாற்கைக்கொப்புவைக்கலாமோ. (௪௬)

வெள்ளியமுறுவல்செவ்வாய்விளங்கிழையிளம்பொற்கொம்பின்
வள்ளுகிர்க்குவமைநம்மான்மயர்வறவகுக்கலாமோ
எள்ளுதிர்நீரேமூக்கையென்றுகொண்டிவறிப்பின்னும்
கிள்ளைகண்முருக்கின்பூவைக்கிழிக்குமஃதழிக்கலாமோ. (௪௭)

அங்கையுமடியுங்கண்டாலரவிந்தநினையுமாபோல்
செங்களிசிதறிநீலஞ்செருக்கியதெய்வவாட்கண்
மங்கைதன்கழுத்தைநோக்கிவளரிளங்கமுகும்வாரிச்
சங்கமுநினைதியாயினவையென்றுதுணிதிதக்கோய். (௪௮)

பவளமுங்கிடையுங்கொவ்வைப்பழனும்பைங்குமுதப்போதும்
துவளிலவங்கங்கோபமுருக்கென்றித்தொடக்கஞ்சாலத்
தவளமென்றுரைக்கும்வண்ணஞ்சிவந்துதேன்றதும்புமாகின்
குவளையுண்கண்ணிவண்ணவாயதுகுறியுமஃதே. (௪௯)

சிவந்ததோரமிழ்தமில்லைத்தேனில்லையுளவென்றாலும்
கவர்ந்தபோதன்றியுள்ளநினைப்பவோர்களிப்புநல்கா
பவர்ந்தவாணுதலினுடன்பவளவாய்க்குவமைபாவித்
துவந்தபோதுவந்தவண்ணமுரைத்தபோதுரைத்ததாமோ. (௫௦)

முல்லையுமுருந்துமுத்துமுறுவலென்றுரைத்தபோது
சொல்லையுமமிழ்தும்பாலுந்தேனுமென்றுரைக்கத்தோன்றும்
அல்லதொன்றாவதில்லையமிழ்திற்குமுவமையுண்டோ
வல்லையேலறிந்துகோடிமாறிலாவாறுசான்றோய். (௫௧)

ஓதியுமெள்ளுந்தொள்ளைக்குமிழுமூக்கொக்குமேற்ற
சோதிசெம்பொன்னுமின்னுமணியும்போற்றுளங்கித்தோன்றா
ஏதுவுமில்லைவல்லாரெழுதுவார்க்கெழுதவொண்ணா
நீதியைநோக்கிநீயேநினைதியானெடிதுகாண்பாய். (௫௨)

வள்ளைகத்தரிகைவாமமயிர்வினைக்கருவியென்னப்
பிள்ளைகளுரைத்தவொப்பைப்பெரியவருரைக்கிற்பித்தாம்
வெள்ளைவெண்டோடுசெய்தவிழுத்தவம்விளைந்ததென்றே
உள்ளுதியுலகுக்கெல்லாமுவமைக்குமுவமையுண்டோ. (௫௩)

பெரியவாய்ப்பரவையொவ்வாபிறிதொன்றுநினைந்துபேச
உரியவாயொருவருள்ளத்தடங்குவவல்லவுண்மை
தெரியவாயிரக்கானோக்கிற்றேவர்க்குந்தெய்வமென்னக்
கரியவாய்வெளியவாகும்வாட்டங்கண்களம்மா. (௫௪)

கேளொக்குமன்றியொன்றுகிளத்தினாற்கீழ்மைத்தாமே
கோளொக்குமென்னினல்லாற்குறியொக்கக்கூறிற்றன்றால்
வாளொக்கும்வடிக்கணுடன்புருவத்துக்குவமைவைக்கின்
தாளொக்கவளைந்துநிற்பவிரண்டில்லையநங்கசாபம். (௫௫)

நன்னாளுநளினநாணுமுகத்தினைநுதலைநாடிப்
பன்னாளும்பன்னியாற்றாமதியெனும்பண்பதாகி
முன்னாளின்முளைவெண்டிங்கண்முறைநாளுங்குறைவேயாகி
என்னாளும்வளர்ந்ததென்னினிறையொக்குமியல்பிற்றாமே. (௫௬)

வனைபவரில்லையன்றேவனத்துணும்வந்தபின்னை
அனையனவெனினுந்தாந்தமழகுக்கோரழிவுண்டாகா
வினைசெயக்குழன்றவல்லவிதிசெயவிளைந்தநீலம்
புனைமணிப்பவளமின்னும்புதுமையாமுவமைபூணா. (௫௭)

கொண்டலின்குழவியாம்பல்குனிசிலைவள்ளைகொற்றக்
கெண்டையொண்டரளமென்றிக்கேண்மையகிடந்ததிங்கள்
மண்டிலவதனமென்றுவைத்தனன்விதியேநீயப்
புண்டரீகத்தையுற்றபொழுததுபொருந்தித்தேர்வாய். (௫௮)

காரினைக்கழித்துக்கட்டிக்கள்ளினோடாவிகாட்டிப்
பேரிருட்பிழம்புதோய்ந்துநெறிவுறீஇப்பிறங்குகற்றைச்
சோர்குழற்றொகுதிச்சூழல்சும்மைசெய்தனையதம்மா
நேர்மையைப்பருமைசெய்தநிறைநறுங்கூந்தனீத்தம். (௫௯)

புல்லிதழ்கமலத்தெய்வப்பூவிற்குமுண்டுபொற்பின்
எல்லைசூழ்மதிக்குமுண்டங்களங்கமென்றுரைக்குமேதம்
அல்லவுஞ்சிறிதுகுற்றமகன்றிலவன்னமன்ன
நல்லியலாளுக்கெல்லாநலனன்றிப்பிறிதுண்டன்றால். (௬0)

மங்கையர்க்கோதிவைத்தவிலக்கணம்வண்ணவாசப்
பங்கயத்தவட்குமையாநிரம்பலபற்றிநோக்கின்
செங்கயற்கருங்கட்செவ்வாய்த்தேவரும்வணங்குந்தெய்வக்
கொங்கையைக்குயிலுக்கொன்றுங்குறைவிலகுறியுமஃதே. (௬௧)

குழல்படைத்தியாழைச்செய்துகுயிலொடுகிளியுங்கூட்டி
மழலையும்பிறவுந்தந்துவடித்தகைம்மலரின்மேலான்
இழைபொருமுலையினாடனின்சொற்களியையச்செய்தான்
பிழையிலனுவமைகாட்டப்பெற்றிலன்பெறுங்கொலின்னும். (௬௨)

வானின்றவுலகமூன்றும்வரம்பின்றிவளர்ந்தவேனும்
நாநின்றசுவைமற்றொன்றோவமிழ்தன்றிநல்லதில்லை
மீனின்றகண்ணினாடன்மென்மொழிக்குவமைவேண்டின்
தேனொன்றோவமிழ்தமொன்றோவவைசெவிக்கின்பஞ்செய்யா. (௬௩)

பூவருமழலையன்னம்புனைமடப்பிடியென்றின்ன
தேவருமருளத்தக்கசெலவினவெனவுந்தேறேன்
பாவருங்கிழமைத்தொன்மைப்பருணிதர்தொடுத்தபத்தி
நாவருங்கிளவிச்செவ்விநடைவருநடையணல்லோய். (௬௪)

என்னிறமுரைக்கேன்மாவினிளநிறமுதிருமற்றைப்
பொன்னிறங்கறுக்குமென்றுன்மணிநிறமுவமைபோதா
மின்னிறநாணியெங்கும்வெளிப்படாவொளிக்கும்வேண்டின்
தன்னிறந்தானேயொக்குமலர்நிறஞ்சமழ்க்குமன்றே. (சுரு)

மங்கையரவளையொப்பார்மற்றுளரில்லரென்னும்
சங்கையிலுள்ளந்தானேசான்றெனக்கொண்டுசான்றோய்
அங்கவணிலைமையெல்லாமளந்தறிந்தருகுசார்ந்து
திங்கள்வாண்முகத்தினுட்குச்செப்பெனப்பின்னுஞ்செப்பும். (சுசு)

வேறு. முன்னைநாண்முனியொடுமுதியநீர்மிதிலைவாய்ச்
சென்னிநீண்மாலையான்வேள்விகாணியசெல
அன்னமாடுறையுளுக்கருகுநின்றுளையக்
கன்னிமாடத்திடைக்கண்டதுங்கழறுவாய். (சுஎ)

சூழிமால்யானையின்றுணைமருப்பிணையெனக்
கேழிலாவனமுலைக்கிரிசுமந்திடைவதோர்
வாழிவான்மின்னிளங்கொடியின்வந்தாளையன்
ஏழியானரசவைக்கண்டதும்மருளுவாய். (சுஅ)

வரைசெய்தாள்வில்லிறுத்தவனமாமுனியொடும்
விரசினுனல்லனேல்விடுவல்யானுயிரெனக்
கரைசெயாவேலையிற்பெரியகற்பினடெரிந்
துரைசெய்தாளஃதெலாமுணரநீயுரைசெய்வாய், (சுகூ)

முன்புநானறிகிலாமுளிநெடுங்கானிலே
என்பினேபோதுவாய்நீணை தியோவேழைநீ
இன்பமாயாருயிர்க்கினியையாயிணையினித்
துன்பமாய்முடிதியோவென்றதுஞ்சொல்லுவாய். (எ0)

ஆனபேரரசிழந்தடவிசேர்வாயுனக்
கியானலாதனவெலாமினியவோவினியெனு
மீனுலாநெடுமலர்க்கண்கணீர்விழவிழுந்
தூனிலாவுயிரின்வந்தயர்வதும்முரைசெய்வாய். (எக)

மல்லன்மாநகர்துறந்தேகுநாண்மதிதொடும்
கல்லின்மாமதின்மணிக்கடைகடந்திடுதன்முன்
எல்லைதீர்வரியவெங்கானம்யாதோவெனுச்
சொல்லினாளஃதெலாமுணரநீசொல்லுவாய். (எஉ)

இனையவாறுரைசெயாவினிதினேகுதியெனு
வனையுமாமணிநன்மோதிரமளித்தறிஞநின்
வினையெலாமுடிகெனுவிடைகொடுத்துதவலும்
புனையும்வார்கழலினுனருளொடும்போயினுன். (எங)

அங்கதக்குரிசிலோடுசினத்துழவராம்
வெங்கதத்தலைவரும்விரிகடற்படையொடும்
பொங்குவிற்றலைவரைத்தொழுதுமுன்போயினார்
செங்கதிர்ச்செல்வனைப்பணிவுறுஞ்சென்னியார். (௭௪)

நாடவிட்டபடலம்முற்றிற்று. ஆ திருவிருத்தம்-௮௨௩,

## ௧௩ - ஆவது. பிலநீங்குபடலம்.

போயினார்போயபின்புறநெடுந்திசைகடோ
றேயினானிரவிகாதலனுமேயினபொருட்
காயினாரவரையங்கன்னநாளவதியிற்
றாயினாருலகினைத்தகைநெடுந்தானையார். (௧)

குன்றிசைத்தனவெனக்குவவுதோள்வலியினார்
மின்றிசைத்திடுமிடைக்கொடியைநாடினர்விராய்
வன்றிசைப்படருமாறொழியவண்டமிழுடைத்
தென்றிசைச்சென்றுளார்திறனெடுத்துரைசெய்வாம். (௨)

சிந்துராகத்தொடுந்திரண்மணிச்சுடர்செறிந்
தந்திவானத்தினின்றவிர்தலானரவினோ
டிந்தியாறெய்தலானிறைவன்மாமௌலிபோல்
விந்தைநாகத்தின்மாடெய்தினார்வெய்தினால். (௩)

அந்நெடுங்குன்றமோடவிர்மணிச்சிகரமும்
பொன்னெடுங்கொடுமுடிப்புரைகளும்புடைகளும்
நன்னெடுந்தாழ்வரைநாடினார்நவையிலார்
பன்னெடுங்காலமாமென்னவோர்பகலிடை. (௪)

மல்லன்மாஞாலமோர்மறுவுருவகையினச்
சில்லலோதியையிருந்துறைவிடந்தேடுவார்
புல்லினாருலகினைப்பொதுவிலாவகையினால்
எல்லைமாகடல்களேயாகுமாறெய்தினார். (௫)

விண்டுபோயிழிவமேனிமிர்வவிண்படர்வவேர்
உண்டமாமரனினம்மலையும்வாயுறையுநீர்
மண்டுபாரதனின்வாழுயிர்களம்மதியினார்
கண்டிலாதனவயன்கண்டிலாதனகொலாம். (௬)

வேறு. ஏகினார்யோசனையேழொடேழுபார்
சேகரத்தென்றிசைகடிதுசெல்கின்றார்
மேகமாலையினொடும்விரவிமேதியின்
நாகுசேர்நருமதையாறுநண்ணினார். (௭)

அன்னமாடிடங்களுமமரர்நாடியர்
துன்னியாடிடங்களுந்துறக்கமேயவர்
முன்னியாடிடங்களுஞ்சுரும்புமூசுதேன்
பன்னியாடிடங்களும்பரந்துசுற்றினார். (௮)

பெறலருந்தெரிவையைநாடும்பெற்றியார்
அறனறுங்கூந்தலுமள்கவண்டுசூழ்
நிறைநறுந்தாமரைமுகமுநித்தில
முறுவலுங்காண்பரான்முழுதுங்காண்கிலார். (௯)

செருமதயாக்கையர்திருக்கில்சிந்தையர்
தருமதயாவிவைதழுவுந்தன்மையர்
பொருமதயானையும்பிடியும்புக்குழல்
நருமதையாமெனுநதியைநீங்கினார். (௧௦)

தாமகூடத்திரைத்தீர்த்தசங்கமும்
நாமகூடப்பெருந்திசையைநல்கிய
வாயகூடச்சுடர்மணிவயங்குறும்
ஏமகூடத்தடங்கிரியையெய்தினார். (௧௧)

மாடுறுகிரிகளுமரனுமற்றவும்
சூடுறுபொன்னெனப்பொலிந்துதோன்றுறப்
பாடுறுசுடரொளிபரப்புகின்றது
வீடுறுமுலகினும்விளங்குமெய்யது. (௧௨)

பறவையும்பல்வகைவிலங்கும்பாடமைந்
துறைவனகனகநுண்பூழியொட்டலான்
நிறைநெடுமேருவைச்சேர்ந்தநீரவாய்ப்
பொறைநெடும்பொன்னொளிமுழுதும்போர்ப்பது. (௧௩)

பரவியகனகநுண்பராகம்பாடுற
எரிசுடர்ச்செம்மணியீட்டத்தோடிழி
அருவியுநதிகளுமலங்குதீயிடை
உருகுபொன்பாய்வபோன்றொழுகுகின்றது. (௧௪)

விஞ்சையர்பாடலும்விசும்பின்வெள்வளைப்
பஞ்சின்மெல்லடியினாராடற்பாணியும்
குஞ்சரமுழக்கமுங்குமுறுபேரியின்
மஞ்சினமுரற்றலும்வயங்குமாண்பது. (௧௫)

அனையதுநோக்கினாராமிதாமயில்
வினையவேலிராவணனிருக்கும்வெற்பெனும்
நினைவினருவந்துயர்ந்தோங்குநெஞ்சினர்
சினமிகக்கனற்பொறிசிந்துசெங்கணார். (௧௬)

இம்மலைகாணுதுமேழைமானையச்
செம்மலைநீக்குதுஞ்சிந்தைத்தீதென
விம்மலுற்றுவகையின்விளங்குமுள்ளத்தார்
அம்மலையேறினாரச்சநீங்கினார். (கஎ)

இரிந்தனகரிகளும்யாளியீட்டமும்
விரிந்தகோளரிகளும்வெருவிநீங்கின
திரிந்தனரெங்கணுந்திருவைக்காண்கிலார்
பரிந்தனசிந்தனைபரிகின்றாமென. (கஅ)

ஐம்பதிற்றிரட்டிகாவதத்தினுலகன்
றும்பரைத்தொடுவதொத்துயர்விணோங்கிய
செம்பொனற்கிரியையோர்பகலிற்றேடினார்
கொம்பினைக்கண்டிலர்குப்புற்றேகினார். (கக)

வெள்ளமோரிரண்டெனவிரிந்தசேனையைத்
தெள்ளுநீருலகெலாந்தெரிந்துதேடினார்
எள்ளருமகேந்திரத்தெம்மிற்கூடுமென்
றுள்ளினாருயர்நெடுமோங்கனீங்கினார். (உ0)

மாருதிமுதலியவயிரத்தோள்வயப்
போர்கெழுவீரரேகுழுமிப்போகின்றார்
நீரெனும்பெயருமந்நெறியினீங்கலால்
சூரியன்வெருவுமோர்சுரத்தைநண்ணினார். (உக)

புள்ளடையாவிலங்கரிதுபுல்லொடும்
கள்ளடைமரனிலகல்லுந்தீந்தக
டுள்ளிடையரவநுண்பொடியொடொட்டலின்
வெள்ளிடையல்லதொன்றரிதவ்வெஞ்சுரம். (உஉ)

நன்புலனடக்குறவுணர்வுநாமறப்
பொன்பொலியாக்கைகள்புழுங்கிப்பொங்குவார்
தென்புலத்தங்கெரிநரகிற்சிந்திய
என்பில்பல்லுயிரெனவெம்மையெய்தினார். (உஙு)

நீட்டியநாவினர்நிலத்திற்நீண்டுதோ
றூட்டியவெம்மையாலுலையுங்காலினர்
காட்டினுங்காய்ந்ததங்காயர்தீயலால்
சூட்டகன்மேலெழுபொரியிற்றுள்ளினார். (உச)

ஓதுங்கலாநிழலினைக்காண்கிலாதுயிர்
பிதுங்கலாமுடலினர்முடிவில்பீழையார்
பதங்கடீப்பருகிடப்பதைக்கின்றார்பல
விதங்கொளாநெடும்பிலவழியின்மேவினார். (உரு)

மீச்செலவரிதினிவிளியினல்லது
தீச்செலவொழியவுந்தடுக்குந்திண்பில
வாய்ச்செலனன்றெனமனத்தினெண்ணினார்
போய்ச்செலவறிதுமென்றதனிற்போயினார். (௨௬)

அக்கணத்தப்பிலத்தந்தமெய்தினார்
திக்கினொடுலகுறச்செறிந்ததேங்கிருள்
எக்கியகதிரவற்கஞ்சியேமுறப்
புக்கதேயனையதோர்புரைபுக்கெய்தினார். (௨௭)

எழுகிலர்காலெடுத்தேகுமெண்ணிலர்
வழியுளதாமெனுமுணர்வுமாற்றினார்
இழுகியநெய்யெனுமிருளினேக்கத்துள்
முழுகியமெய்யெனவுயிர்ப்புமுட்டினார். (௨௮)

நின்றனர்செய்வதோர்நிலைமைநோக்கலர்
பொன்றினராமெனப்பொருமும்புந்தியர்
வன்றிறன்மாருதிவல்லையோவெமை
இன்றிதுகாக்கவென்றிரந்துகூறினார். (௨௯)

உய்வுறுத்துவென்மனமுலையிரூழின்வால்
மெய்யுறப்பற்றுதிர்விடுகிலீரென
அய்யனக்கணத்தினின்றகலுநீணெறி
கய்யினிற்றடவிவெங்காலினேகினான். (௩௦)

பன்னிரண்டியோசனைபடர்ந்தமெய்யினன்
மின்னிரண்டனையகுண்டலங்கள்வில்லிடத்
துன்னிருடொலைந்திடத்துருவியேகினான்
பொன்னெடுங்கிரிநிகர்பொலிந்ததோளினான். (௩௧)

கண்டனன்கடிநகர்கமலத்தொண்கதிர்
மண்டிலமறைந்துறைந்தனையமாண்பது
விண்டலநாணுறவிளங்குகின்றது
புண்டரிகத்தவள்வதனம்போன்றது. (௩௨)

கற்பகக்கானதுகமலக்காடது
பொற்பெருங்கோபுரப்புரிசைபுக்கது
அற்புதவமருமெய்தலாவது
சிற்பமுமயன்மனம்வருந்திச்செய்தது. (௩௩)

இந்திரநகரமுநிகரிலாதது
மந்திரமணியினிற்பொன்னின்மண்ணினின்
அந்தரத்திழிசுடரவையின்றுயினும்
உந்தருமிருடுரந்தொளிரநின்றது. (௩௪)

புவிபுகழ்சென்னிபேரமலன்றேள்புகழ்
கவிகடமனேயெனக்கனகராசியும்
சவியுடைத்தூசுமென்சார்ந்துமாலேயும்
அவிரிழைக்குப்பையுமளவிலாதது. (ருடு)

பயில்குரற்கிண்கிணிபரந்தபாவையர்
இயல்புடைமைந்தர்களியக்கிலாமையால்
துயிலவுநோக்கவுந்துணையதன்றியும்
உயிரிலாவோவியமென்னவொப்பது. (ருசு)

அமிழ்துலேயயினியையடுத்தவுண்டியும்
தமிழ்நிகர்நறவமுந்தணிதண்டேறலும்
இமிழ்கனிப்பிறக்கமும்பிறவுமின்னன
கமழ்வுறத்தோன்றியகணக்கில்கொட்பது. (ருஎ)

வேறு. கன்னிநெடுமாநகரமன்னதெதிர்கண்டார்
இந்நகரமாமிகவிராவணனதூரென்
றுன்னியுறையாடினருவந்தனர்வியந்தார்
பொன்னினெடுவாயிலதனூடுநனிபுக்கார். (ருஅ)

புக்கநகரத்தினிதுநாடினர்புகுந்தார்
மக்கள்கடைதேவர்தலேவானுலகின்வையத்
தொக்கவுறைவோருருவமோவியமலான்மற்
றெக்குறியினுள்ளவுமெதிர்ந்திலர்திரிந்தார். (ருகூ)

வாவியுளபொய்கையுளவாசமணநாறும்
காவுமுளகாவிவிழியார்மொழிகளென்னக்
கூவுமிளமென்குயில்கள்பூவைகிளிகோலத்
தூவிமடவன்னமிவையுள்ளசுவடில்லே. (சுo)

ஆயநகரத்தினியல்புள்ளூறவறிந்தார்
மாயைகொலெனக்கருதிமற்றுநினேவுற்றூர்
தீயபிலனுட்பிறவிசென்றவிவையொன்றே
தூயதுதுறக்கமெனநெஞ்சுதுணிவுற்றூர்.  (சுக)

இறந்திலமிதற்குரியதெண்ணியிலமேது
மறந்திலமயிர்ப்பினெடிமைப்புளமயக்கம்
பிறந்தவர்செயற்குரியசெய்தல்பிழையின்றுல்
திறந்தருவதென்னெனவிசைத்தனர்திகைத்தார். (சுஉ)

சாம்பனவனென்றுரைசெய்வானெழுசலத்தால்
காம்பனேயதோளியையொளித்தபடுகள்வன்
நாம்புகவமைத்தபொறிநன்றுமுடிவின்றுல்
ஏம்பலினிமேலேவிதியான்முடியுமென்றுன். (சுங)

இன்றுபிலனீதிடையினேறரிதெனிற்பார்
தின்றுசகரர்க்கதிகமாகிநனிசேறும்
அன்றதெனின்வஞ்சனையரக்கரையடங்கக்
கொன்றெழுதுமஞ்சலெனமாருதிகொதித்தான். (சச)

மற்றவருமற்றதுமனக்கொளவலித்தார்
உற்றனர்புரத்திடையவ்வொண்சுடரினுள்ளோர்
நற்றவமனைத்துமுருநண்ணியொளிபெற்ற
கற்றைவிரிபொற்சடையினளையெதிர்கண்டார். (சரு)

மருங்கலசவற்கலைவரிந்துவரிவாளம்
பொருங்கலசமொக்குமுலைமாசுபுடைபூசிப்
பெருங்கலைமதித்திருமுகத்தள்பிறழ்செங்கேழ்
கருங்கயல்களிப்புறவுமூக்கினுதிகண்ணுள். (சசு)

தேரனையவல்குல்செறிதிண்கதலிசெப்பும்
ஊருவினொடொப்புறவொடுக்கியுறவொல்கும்
நேரிடைசலிப்பறநிறுத்திநிமிர்கொங்கைப்
பாரமுளொடுக்குறவுயிர்ப்பிடைபரிப்ப. (சஎ)

தாமரைமலர்க்குவமைசால்புறுதளிர்க்கைப்
பூமருவுபொற்செறிகுறங்கிடைபொருந்தக்
காமமுதலுற்றபகைகாறளரவாசை
நாமமறியப்புலனுநல்லறிவுபுல்க. (சஅ)

நெறிந்துநிமிர்கற்றைநிறையோதிநெடுநீலம்
செறிந்தசடையுற்றதுதலத்தினெறிசெல்லப்
பறிந்துவினைபற்றறமனப்பெரியபாசம்
பிறிந்துபெயரக்கருணைகண்வழிபிறங்க. (சகூ)

இருந்தனளிருந்தவளையெய்தினரிறைஞ்சா
அருந்ததியெனத்தகையசீதையவளாகப்
பரிந்தனர்பதைத்தனர்பணித்தகுறிபண்பிற்
றெரிந்துணர்திமற்றிவள்கொறேவியெனலோடும். (ருo)

எக்குறியொடெக்குணமெடுத்திவணுரைக்கேன்
இக்குறியுடைக்கொடியிராமன்மனையாளோ
அக்கின்மணிமுத்தமணியாரமதினேர்நின்
றொக்குமெனிஞெக்குமெனமாருதியுரைத்தான். (ருக)

அன்னபொழுதின்கணவணங்குமறிவுற்றுள்
முன்னனையர்சேறன்முறையன்றெனமுனிந்தாள்
துன்னரியபொன்னகரியின்னுறைவிரல்வீர்
என்னவரவியாவருரைசெய்மெனவிசைத்தாள். (ருஉ)

வேதனையரக்கரொருமாயைவிளைவித்தார்
சீதையையொளித்தனர்மறைத்தபுரைதேர்வுற்
றேதமிலறத்துறைநிறுத்தியவிராமன்
தூதருலகிற்றிரிதுமென்னுமுரைசொன்னார். (ருந)

என்றலுமிருந்தவளெழுந்தனளிரங்கிக்
குன்றனையதாயதொருபேருவகைகொண்டாள்
நன்றுவரவாகநடனம்புரிவலென்னா
நின்றனணெடுங்கணிணைநீர்கலுழிகொள்ள. (ருச)

எவ்வுழையிருந்தனனிராமனெனயாணர்ச்
செவ்வுழைநெடுங்கணவள்செப்பிடுதலோடும்
அவ்வுழைநிகழ்ந்ததனையாதியினொடந்தம்
வெவ்விழைவில்சிந்தைநெடுமாருதிவிரித்தான். (ருரு)

கேட்டவளுமென்னுடையகேடிறவமின்னே
காட்டியதுவீடெனவிரும்பிநனிகானீர்
ஆட்டியமிழ்தன்னசுவையின்னடிசிலன்போ
டூட்டிமனனுள்குளிரவின்னுரையுரைத்தாள். (ருசா)

மாருதியுமற்றவண்மலர்ச்சரண்வணங்கி
யாரிநகருக்கிறைவர்யாதுநினியற்பேர்
பார்புகழ்தவத்தினைபணித்தருளுகென்றான்
சோர்குழலுமற்றையவனுற்றபடிசொன்னாள். (ருஎ)

நான்முகநுனித்தநெறிநாறுவரநொய்தாய்
மேன்முகநிமிர்த்துவெயில்காலொடுவிழுங்கா
மான்முகமுகத்தவன்மயன்செய்ததவத்தால்
நான்முகனளித்துளதிமாநகரநல்லோய். (ருஅ)

அன்னதிதுதானவனரம்பையருளாங்கோர்
நன்னுதலினுண்முலைநயந்தனனநல்லாள்
என்னுயிரனாளவளையானவனிரப்பப்
பொன்னுலகினின்றியல்பிலத்திடைபுணர்த்தேன். (ருகூ)

புணர்ந்தவளுமன்னவனுமன்றில்விழைபோகத்
துணர்ந்திலர்நெடும்பகலிம்மாநகருறைந்தார்
கணங்குழையினாளொடுயர்காதலொருவாதுற்
றிணங்கிவருபாசமுடையேனுடனிருந்தேன். (சா0)

இருந்துபலநாள்கழியுமெல்லையினின்வல்லோய்
திருந்திழையைநாடிவருதேவரிறைசீறிப்
பெருந்திறலினானையுயிருண்டுபிழையென்றம்
முருந்துநிகர்மூரனகையாளையுமுனிந்தான். (சாக)

முனிந்தவளையுற்றமுறைமுற்றுமொழிகென்னக்
கனிந்ததுவர்வாயவளுமென்னையிவள்கண்ணால்
இநிந்தைமுடிவுற்றதெனவண்ணனுமிதெல்லாம்
நினைந்திவணிருத்திநகர்காவனினதென்றான். (சுஉ)

என்றனளிருத்தியிருளாகநெறியென்ன
ஒன்றுரையெனக்குமுடிவென்றுரைசெயாமுன்
வன்றிறலவ்வானரமிராமனருள்வந்தால்
அன்றுமுடிவாகுமிடரென்றவனகன்றான். (சுங)

உண்ணவுளபூசவுளசூடவுளவொன்றோ
வண்ணமணியாடையுளமற்றுமுளபெற்றேன்
அண்ணலவைமுற்றுமறவிட்டதனைவெல்வான்
எண்ணரியபல்பகலிருந்தவமிழைத்தேன். (சுச)

அய்யிருபதோசனையமைந்தபிலமையா
மெய்யுளதுமேலுலகம்வேறுநெறிகூறு
உய்யுநெறியுண்டுதவுவீரெனினுபாயம்
செய்யும்வகையுண்டெனினினைத்திர்சிறிதென்றாள். (சுரு)

அன்னதுசுயம்பிரபைகூறவநுமானும்
மன்னுபுலன்வென்றுவருமாதவண்மலர்த்தாள்
சென்னியின்வணங்கிநனிவானவர்கள்சேரும்
பொன்னுலகமீகுவனினக்கெனல்புகன்றான். (சுசு)

முழைத்தலையிருட்கடலின்மூழ்கிமுடிவேமைப்
பிழைத்துயிருயிர்க்கவருள்செய்தபெரியோனே
இழைத்தசெயலாயவினையென்றனரிரந்தார்
வழுத்தரியமாருதியுமன்னதுவலிப்பான். (சுஎ)

நடுங்கன்மினெனச்சொலைநவின்றுநகைநாற
மடங்கலினெழுந்துமறையேறரியவானத்
தொடுங்கலில்பிலர்தலைதிறந்துலகொடொன்ற
நெடுங்கைகள்சுமந்துநெடுவானுறநிமிர்ந்தான். (சுஅ)

எருத்துறுசுடர்ப்புயமிரண்டுமெயிறென்ன
மருத்துமகனிப்படியிடந்துறவளர்ந்தான்
கருத்துநிமிர்கண்ணினெதிர்கண்டவர்கலங்க
உருத்துலகெடுத்தகருமாவினையுமொத்தான். (சுகூ)

மாவடிவுடைக்கமலநான்முகன்வகுக்கும்
தூவடிவுடைச்சுடர்கொள்விண்டலைதொளைக்கும்
மூவடிகுறித்துமுறையீரடிமுடித்தான்
பூவடிவுடைப்பொருவில்சேவடிபுரைந்தான். (எ௦)

ஏழிருபதோசனையிடந்துபடியின்மேல்
ஊழுறவெழுந்ததனையும்பருமொடுங்கப்
பாழிநெடுவன்பிலனுணின்றுபடர்மேல்பால்
ஆழியினெறிந்தநுமன்மேகமெனவார்த்தான். (எக)

இன்றுமுளமேல்கடலியக்கில்பிலநீவா
நின்றுநிலைபெற்றுளதுநீணுதலியோடும்
குன்றுபுரைதோளவரெழுந்துநெறிகொண்டார்
பொன்றிணிவிசும்பினிடைநன்னுதலிபோனுள். (எஉ)

மாருதிவலித்தகைமைபேசிமறவோரும்
பாரிடைநடந்துபகலெல்லைபடரப்போய்
நீருடையபொய்கையெனுநேமியிடைநின்ருர்
தேருடைநெடுந்தகையுமேலைமலைசென்றுன். (எஙு)

பிலநீங்குபடலம் முற்றிற்று. ஆ திருவிருத்தம்-அகஙசு.

---

## கச-ஆவது. ஆறுசெல்படலம்.

---

கண்டார்பொய்கைக்கண்ணகனன்னீர்க்கரைகாமுற்
றுண்டார்தேனுமொண்கனிகாயுமொருசூழல்
கொண்டாரன்றேவின்றுயில்குன்றிற்குறியெய்தித்
தண்டார்வென்றித்தானவன்வந்தான்றகைவில்லான். (க)

மலையேபோல்வான்மால்கடலொப்பான்மறமுற்றக்
கொலையேயொப்பான்கூற்றைநிகர்ப்பான்கொடுமைக்கோர்
நிலையேபோல்வானீர்மையிலாதானிமிர்திங்கட்
கலையேபோலுங்காலவெயிற்றன்கனல்கண்ணன். (உ)

வேறு. கருவிமாமழைகைகடாவிமீ
துருவமேனிசென்றுலவியொற்றலால்
பொருவின்மாரிமேலொழுகுபொற்பினல்
அருவிபாய்தருங்குன்றமேயனுன். (ஙு)

வானவர்க்குமற்றவுர்வலிக்குநேர்
தானவர்க்குமேயரியதன்மையான்
ஆனபுட்கலனவனெடாடவே
றேனவர்க்குமொன்றெண்ணவொண்ணுமோ. (ச)

பிறங்குபங்கியான்பெயரும்பெட்பினிற்
கறங்குபோன்றுளான்பியையுங்கையினுன்
அறங்கொள்சிந்தையார்நெறிசெலாய்வினல்
உறங்குவாரைவந்தொல்லையெய்தினுன். (ரு)

பொய்கையென்னதென் றுணர்ந்தும்புல்லியோர்
எய்தினர்கள்யாரிதுவெனுவெனு
அய்யனங்கதனலங்கன் மார்பினிற்
கய்யின்மோதினன்கால்னேயனுன். (சு)

மற்றிமைந்தனுமுறக்கமாறினன்
இற்றிவன்கொலாமிலங்கைவேந்தெனு
எற்றினனைநேரெற்றினனவன்
முற்றினனிகற்காதிமூர்த்தியான். (எ)

இடியுண்டாங்கணேரோங்கலிற்றதொத்
தடியுண்டான்றளர்ந்தலறிவீழ்தலும்
தொடியின்றோள்விசைத்தெழுந்துசுற்றினர்
பிடியுண்டாரெனத்துயிலும்பெற்றியார். (அ)

யார்கொலாமிவணிகழ்ந்ததென்னெனுத்
தாரைசேயினைத்தனிவினுயினன்
மாருதேயன்மற்றவனும்வாய்மைசால்
ஆரியாதெரிந்தறிகிலேனென்றான். (கூ)

யானிவன்றனைத்தெரியவெண்ணினேன்
தூனிவந்தவேற்றுமிரனென்னும்பே
ராணிவ்வாழ்புனற்பொய்கையாளுமோர்
தானவன்னெனச்சாம்பன்சாற்றினன். (கO)

வேறுமெய்துவாருளர்கொலாமெனுத்
தேறியின்றுயிற்செலவுதீர்ந்துளார்
வீறுசெஞ்சுடர்க்கடவுள்வேலைவாய்
நாறுநாண்மலர்ப்பெண்ணைநாடுவான். (கக)

புண்ணைவெம்முலைப்புளினமேய்தடத்
துண்ணவாம்பலின்னமிழ்தமூறுவாய்
வண்ணவெண்ணகைத்தரளவாண்முகப்
பெண்ணைநண்ணினர்பெண்ணைநாடுவார். (கஉ)

துறையுந்தோகைநின்றுடுசூழலும்
குறையுஞ்சோலையுங்குளிர்ந்தசாரனீர்ச்
சிறையுந்தெள்ளுபூந்தடமுந்தெண்பளிக்
கறையுந்தேடினரறிவின்கோடியார். (கந)

அணிகொழித்துவந்தெவருமாடினர்
பிணிகொழித்தவெம்பிறவிவேரின்வன்
றுணிகொழித்தருஞ்சுழிகடோறுநன்
மணிகொழித்திடுந்துறையின்வைகினர். (கச)

ஆடுபெண்ணைநீராறுமேறினார்
காடுநண்ணினார்மலைகடந்துளார்
வீடுநண்ணினாரென்னவீசுநீர்
நாடுநண்ணினார்நாடுநண்ணினார். (௧௫)

தசநவப்பெயர்த்தாலசண்பகத்
தசநவப்பிரத்தகனநாடொரீஇ
உசனவப்பெயர்க்கவியுதித்தபேர்
இசைவிதர்ப்பநாடெளிதினெய்தினார். (௧௬)

வய்தருப்பமண்டலனில்வந்துயுக்
கெய்தருப்பமத்தனையுமெய்தினார்
மெய்தருப்பைநூல்பிறழுமேனியார்
செய்தவத்துளார்வடிவிற்றேடினார். (௧௭)

அன்னதன்மையாலறிஞர்நாடியச்
செந்நெல்வேலிசூழ்திருநன்னாடொரீஇத்
தன்னையெண்ணுமத்தகைபுகுந்துளார்
துன்னுதண்டகங்கடிதுதுன்னினார். (௧௮)

உண்டகத்துளாருறையுமைம்பொறிக்
கண்டகர்க்கருங்காலனாயினார்
தண்டகத்தையுந்தடவியேகினார்
முண்டகத்துறைகடிதுமுற்றினார். (௧௯)

அள்ளனீரெலாமமரர்மாதரார்
கொள்ளைமாமுலைக்கலவைகோதையிற்
கள்ளுநாறலிற்கமலவேலிவாழ்
புள்ளுமீனுணுபுலவுதீர்தலால். (௨௦)

குஞ்சரங்குடைந்தொழுகுகொட்பதால்
விஞ்சைமன்னர்பால்விரகமங்கைமார்
நஞ்சுவீணையினடத்துபாடலான்
அஞ்சுவார்கணீரருவியாறரோ. (௨௧)

கமுகவார்நெடுங்கனகவூசலிற்
குமுதவாயினார்குயிலையேசுவார்
சமுகவாளியுந்தனுவும்வாண்முதத்
தமுதபாடலார்மருவியாடுவார். (௨௨)

இணையவாயவொண்டுறையையெய்தினார்
நினையும்வேலைவாய்நெடிதுநேடுவார்
வினையவார்குழற்றிருவைமேவலார்
புனையுநோயினார்கடிதுபோயினார். (௨௩)

நீண்டமேனியானெடியதாளினின்
றீண்டுகெங்கைவந்திழிவதென்னலாய்ப்
பாண்டுவெம்மலைபடர்விசும்பினைத்
தீண்டுகின்றதண்சிகரமெய்தினர். (௨௪)

இருளுறுத்துமீதெழுந்துதெண்ணிலா
மருளுறுத்துவண்சுடர்வழங்கலால்
அருளுறுத்திலாவடலரக்கன்மேல்
உருளுறுத்ததிண்கயிலையொத்ததால். (௨௫)

வேறு. விண்ணுறநிவந்தசோதிவெள்ளியங்குன்றமேவிக்
கண்ணுறநோக்கலுற்றார்களியுறக்கனிந்தகாமப்
பண்ணுறுகிளவிச்செவ்வாய்ப்படையுறுநோக்கினாளை
எண்ணுறுதிறத்துங்காணாரிடருறுமனத்தரெய்த்தார். (௨௬)

ஊதைபோல்விசையின்வெங்கணூழைபோல்வயவரோங்கல்
ஆதியையகன்றுசெல்வாரரக்கனல்வஞ்சிப்புண்ட
சீதைபோகின்றாள்கூந்தல்வழீஇவந்துபுவனஞ்சேர்ந்த
கோதைபோற்கிடந்தகோதாவிரியினைக்குறுகிச்சென்றார். (௨௭)

எழுகின்றகிரியிற்றாகியிழிகின்றமணிநீர்யாறு
தொழுகின்றசனகன்வேள்விதொடங்கியசுருதிச்சொல்லால்
உழுகின்றபொழுதினீன்றவொருமகட்கிரங்கிஞாலம்
அழுகின்றகலுழிமாரியாமெனப்பொலிந்ததன்றே. (௨௮)

ஆசில்பேருலகிற்காண்போரளவைநூலெனவுமாகிக்
காசொடுகனகந்தூவிக்கவினுறக்கிடந்தகான்யா
றேசில்போரரக்கன்மார்பினிடைபறித்தெருவைவேந்தன்
வீசியவடகமீக்கோளீதெனவிளங்கிற்றன்றே. (௨௯)

அந்திமுழுதுநாடியாய்வளைமயிலையாண்டும்
சந்தியுற்றிலாதார்நெடிதுபின்றவிரச்சென்றார்
இன்னதீதிலாததீதென்றியாவையுமெண்ணுங்கோளார்
சொன்னதீவினைகடீர்க்குஞ்சுவணகத்துறையிற்புக்கார். (௩0)

சுரும்பொடுதேனும்வண்டுமென்னமுரந்துவன்றிப்புள்ளும்
கரும்பொடுசெந்நெற்காடுங்கமலவாவிகளுமல்கிப்
பெரும்புனன்மருதஞ்சூழ்ந்தகிடக்கைபின்கிடக்கச்சென்றார்
குரும்பைநீர்முரஞ்சுஞ்சோலைக்குலிந்தமும்புறத்துக்கொண்டார். ()

கொங்கணமேழுநீங்கிக்குடகடற்றரளக்குப்பைச்
சங்கணிபானனெய்தறண்புனறவிரவேகித்
திங்களின்கொழுந்துசுற்றுஞ்சிமயநீள்கோட்டுத்தேவர்
அங்கைகள்கூப்பநின்றவருந்ததிக்கருகரானார். (௩௨)

அருந்ததிக்கருகுசென்றுண்டழகினுக்கழகுசெய்தாள்
இருந்ததிக்குணர்ந்திலாதாரேகினாரிடையர்மாதர்
பெருந்ததிக்கருந்தேன்மாறுமரகதப்பெருங்குன்றெய்தி
இருந்ததிற்றீர்ந்துசென்றார்வேங்கடத்திறுத்தகாலை. (௫௩)

முனைவருமறைவலோருமுந்தைநாட்சிந்தைமூண்ட
வினைவருநெறியைமாற்றுமெய்யுணர்வோரும்விண்ணோர்
எனைவருமமரர்மாதர்யாவருஞ்சித்தரென்போர்
அனைவருமருவிநன்னீர்நாளும்வந்தாடுகின்றார். (௫௪)

வேறு. பெய்தவைம்பொறியும்பெருங்காமமும்
வய்தவெஞ்சொலின்மங்கையர்வாட்கணின்
எய்தவைம்பெருவாளியினெண்ணறச்
செய்தவம்பலசெய்குநர்தேவரால். (௫௫)

வலங்கொணேமிமழைநிறவானவன்
அலங்குதாளிணைதாங்கியவம்மலை
விலங்கும்வீடுறுகின்றனமெய்ந்நெறிப்
புலன்கொள்வார்கட்கனையதுபொய்க்குமோ. (௫௬)

ஆயகுன்றினையெய்தியருந்தவம்
மேயசெல்வரைமேவினர்மெய்ந்நெறி
நாயகன்றனைநாளும்வணங்கிய
தூயநற்றவர்பாதங்கள்சூடினார். (௫௭)

சூடியாண்டச்சுரிகுழற்றோகையைத்
தேடிவார்புனற்றெண்டிரைத்தண்டக
காடுநண்ணுகின்றார்மறைநாவலர்
வேடமேயினர்வேண்டுருமேவுவார். (௫௮)

குன்றுசூழ்ந்தகடத்தொடுங்கோவலர்
முன்றில்சூழ்ந்தபடப்பையுமொய்புனல்
சென்றுசூழ்ந்தகிடக்கையுந்தெண்டிரை
மன்றுசூழ்ந்தபரப்பும்மருங்கெலாம். (௫௯)

சூலடிப்பலவின்சுளைதூங்குதேன்
கோலடிப்பவெரீஇக்குலமள்ளரேர்ச்
சாலடித்தருஞ்சாலியின்வெண்முளை
தோலடிக்கிளையன்னந்துவைப்பன. (௬௦)

செருகுறுங்கணிற்றேங்குவளைக்குலம்
அருகுறங்கும்வயன்மருங்காய்ச்சியர்
இருகுறங்குபிறங்கியவாழையில்
குருகுறங்குங்குயிலுந்துயிலுமால். (௬௧)

தெருவினார்ப்புறும்பல்லியந்தேர்மயில்
மருவிமாமழையென்றுகளிப்புறு
பொருநர்தண்ணுமைக்கன்னமும்போகிலா
மருவினார்க்குமயக்கமுண்டாங்கொலோ. (௪௨)

தேரைவன்றலைத்தெங்கிளம்பாளையை
நாரையென்றிளங்கெண்டைநடுங்குவ
தாரைவன்றலைத்தண்ணிளவாம்பலைச்
சேரையென்றுபுலம்புவதேரையே. (௪௩)

நள்ளிவாங்குகடையிளநவ்வியர்
வெள்ளிவால்வளைவீசியவெண்மணி
புள்ளிநாரைசினைபொரியாமையென்
றுள்ளியாமைமுதுகினுடைப்பரால். (௪௪)

சேட்டிளங்கடுவன்சிறுபுன்கையில்
கோட்டதேம்பலவின்கனிக்கூன்சுளை
தோட்டமைந்தபொதும்பரிற்றூங்குதேன்
ஈட்டமென்னச்சென்றீயினமொய்ப்பன. (௪௫)

செல்வரென்றும்வடகலைதென்றமிழ்ச்
சொல்வரம்பினரென்றுஞ்சுளிபடக்
கொல்வரென்றுங்கொடுப்பனரென்றுமவ்
வில்வரம்பிலிறைவனையேத்துவார். (௪௬)

அன்னதண்டகநாடுகடந்தகன்
பொன்னிநாடுபொருவிலரெய்தினார்
செந்நெலுங்கரும்புங்கமுகுஞ்செறிந்
தின்னல்செய்யுநெறியரிதேகுவார். (௪௭)

கொடுறுதாங்கியவாய்க்குழூநாரைவாழ்
தடறுதாங்கியகூனிளந்தாழையின்
மிடறுதாங்கும்விருப்புடைத்தீங்கனி
இடறுவார்நறுந்தேனினிழுக்குவார். (௪௮)

குழூவுமீன்வளர்குட்டமெனக்கொளா
எழூவுபாடலிமிழ்கருப்பேந்திரத்
தொழுகுசாறகன்கூனையினூழ்முறை
முழுகிநீர்க்கருங்காக்கைமுளைக்குமே. (௪௯)

பூநெருங்கியபுள்ளுறுசோலைகள்
தேனெருங்குசொரிதலிற்றேர்வில
மீனெருங்குறும்வெள்ளம்வெரீஇப்பல
வானரங்கண்மரங்களின்வைகுமால். (௫௦)

அனையபொன்னியகன்புனனாடொரீஇ
மனையின்மாட்சிகுலாமலைமண்டலம்
வினையினீங்கியபண்பினர்மேயினார்
இனையதென்றமிழ்நாடுசென்றெய்தினார். (ருக)

அத்திருத்தகுநாட்டினையண்டர்நா
டொத்திருக்குமென்றாலுரையொக்குமோ
எத்திறத்தினுமேழுலகும்புகழ்
முத்துமுத்தமிழுந்தந்துமுற்றுமோ. (ருஉ)

என்றதென்றமிழ்நாட்டினையெங்கணும்
சென்றுநாடித்திரிந்துதிருந்தினார்
பொன்றுவாரிற்பொருந்தினர்போயினார்
துன்றலோதியைக்கண்டிலர்துன்பினார். (ருந)

வன்றிசைக்களிறன்னமகேந்திரக்
குன்றிசைத்ததுவல்லையிற்கூடினார்
தென்றிசைக்கடற்சீகரமாருதம்
நின்றிசைக்குநெடுநெறிநீங்கினார். (ருச)

ஆறுசெல்படலம் முற்றிற்று. ஆ திருவிருத்தம்-கரு௦.

## கரு-ஆவது. சம்பாதிப்படலம்.

மழைத்தவிண்ணகமெனமுழங்கிவானுற
விழைத்தவெண்டிரைக்கரமெடுத்திலங்கையாள்
உழைத்தடங்கண்ணியென்றுரைத்திட்டேழின்வந்
தழைப்பதேகடுக்குமவ்வாழிநோக்கினார். (க)

விரிந்துநீரெண்டிசைமேவிமேன்மையால்
பொருந்துதிர்மகேந்திரத்தென்றுபோக்கிய
அருந்துணைக்கவிகளாமளவில்சேனையும்
பெருந்திரைக்கடலெனப்பெரிதுகூடிற்றே. (உ)

யாவருமவ்வயினெளிதினெய்தினார்
பூவருபொலங்குழற்பொருவில்கற்புடைத்
தேவியைக்காண்கிலார்செய்வதோர்கிலார்
நாவியல்குழறிடநவில்கின்றாரரோ. (ந)

அற்றதுநாள்வரையவதியாட்சியும்
உற்றிலமிராகவனுயிரும்பொன்றுமால்
கொற்றவனாணையுங்குறித்துநின்றனம்
இற்றதுநஞ்செயலினியென்றெண்ணினார். (ச)

அருந்தவம்புரிதுமோவன்னதன்றெனின்
மருந்தருநெடுங்கடுவுண்டுமாய்துமோ
திருந்தியதியாததுசெய்துதீர்துமென்
றிருந்தனர்தம்முயிர்க்கிறுதியெண்ணுவார். (௫)

கரைபொருகனைகடல்கனகமால்வரை
நிரைதுவன்றியவெனநெடிதிருந்தவர்க்
குரைசெயும்பொருளுளதெனவுணர்த்தினான்
அரைசிளங்கோளரியயருஞ்சிந்தையான். (௬)

நாடினாங்கொணருதுநளினத்தானைவான்
மூடியவுலகினைமுற்றுமுட்டியென்
றாடவர்திலகனுக்கன்பினாரெனப்
பாடவம்விளம்பினம்பழியின்மூழ்குவான். (௭)

செய்துமென்றமைந்ததுசெய்துதீர்திலம்
நொய்துசென்றுற்றதுநுவலகிற்றிலம்
எய்தும்வந்தென்பதோரிறையுங்கண்டிலம்
உய்துமென்றாலிதோருரிமைத்தாகுமோ. (௮)

எந்தையுமுனியுமெம்மிறையிராமனும்
சிந்தனைவருந்துமச்செய்கைகாண்குறேம்
நுந்துவெனுயிரினைநுணங்குகேள்வியீர்
புந்தியினன்னதுபுகல்விராமென்றான். (௯)

விழுமியதுரைத்தனைவிசயம்வீற்றிருந்
தெழுவொடுமலையொடுமிகலுந்தோளினாய்
அழுதுமோவிருந்துநம்மன்புபாழ்படத்
தொழுதுமோசென்றெனச்சாம்பன்சொல்லினான். (௧௦)

மீண்டினியொன்றுநாம்விளம்பமிக்கதென்
மாண்டுறுவதுநலமெனவலித்தனம்
ஆண்டகையரசிளங்குமரவன்னது
வேண்டலினின்னுயிர்க்குறுதிவேண்டுமால். (௧௧)

என்றவனுரைத்தலுமிருந்தவாலிசேய்
குன்றுறழ்ந்தெனவளர்குவவுத்தோளினீர்
பொன்றினீர்மடியயான்போவனேலது
நன்றதோவுலகமுநயக்கற்பாலதோ. (௧௨)

சான்றவர்பழியுரைக்கஞ்சித்தன்னுயிர்
போன்றவர்மடிதரப்போந்துளானென
ஆன்றபேருலகுளோரறைதன்முன்னம்யான்
வான்றொடர்குவெனெனமறித்துங்கூறுவான். (௧௩)

வேறு. எல்லைநம்மிறுதியாக்குமென்பதைக்கும்யாவரேனும்
சொல்லவுங்கூடுங்கேட்டாற்றுஞ்சவுமடுக்குங்கண்ட
வில்லியுமிளையகோவும்வீவதுதிண்ணமச்சொல்
மல்லனீரயோத்திபுக்கால்வாழ்வரோபரதன்மற்றோர். (கச)

பரதனும்பின்னுளோனும்பயந்தெடுத்தவருமூரும்
சரதமேமுடிவர்கெட்டேன்சனகியென்றுலகஞ்சாற்றும்
விரதமாதவத்தின்மிக்கவிளக்கினாலுலகத்தியார்க்கும்
கரைதெரிவிலாததுன்பம்விளைந்தவாவெனக்கலுழ்ந்தான். (கரு)

பொருப்புறழ்வயிரத்திண்டோட்பொருசினத்தாளிபோல்வான்
தரிப்பிலாதுரைத்தமாற்றந்தடுப்பருந்தகைத்ததாய
நெருப்பையேவிளைத்தபோலநெஞ்சமுமறுகக்கேட்டு
விருப்பினாலவனைநோக்கிவிளம்பினனெண்கின்வேந்தன். (கசு)

வேறு. நீயுநின்றுரையுநீங்கநின்குலத்
தாயம்வந்தவரொடுந்தனயரில்லையால்
ஆயதுகருதினமன்னதன்றெனின்
நாயகரிறுதியுநவிலற்பாலதே. (கஎ)

ஏகுநீயவ்வழியெய்தியிவ்வழி
தோகையைக்கண்டிலாவகையுஞ்சொல்லியென்
சாகையுமுணர்த்துதிதவிர்திசோகம்போர்
வாகையாயென்றனனன்வரம்பிலாற்றலான். (கஅ)

அவனவையுரைத்தபின்னநுமன்சொல்லுவான்
புவனமூன்றினுமொருபுடையிற்புக்கிலம்
தவனமாண்டவரெனத்தருக்கிலாரெனக்
கவனவேகத்துநீர்கழிதிரோவென்றான். (கக)

பின்னருங்கூறுவான்புலத்தில்வானத்தில்
பொன்வரைக்குமியிற்புறத்துளண்டத்தில்
நன்னுதற்றேவியைக்காண்கிலோமெனின்
சொன்னநாளவதியையிறைவன்சொல்லுமோ. (௨௦)

நாடுதலேநலமென்னுநாடியத்
தோடலர்குழலிதன்றுயரிற்சென்றமர்
வீடியசடாயுவைப்போலவீடுதல்
பாடவமல்லதுபழியிற்றுமென்றான். (௨க)

என்றலுங்கேட்டனனொருவைவேந்தன்றன்
பின்றுணையாகியபிழைப்பில்வாய்மையான்
பொன்றினனென்றசொற்புலம்புநெஞ்சினன்
குன்றெனநடந்தவர்க்குறுகன்மேயினான். (௨௨)

முறையுடையெம்பியார்முடிந்தவாறெனுப்
பறையிடுநெஞ்சினன்பதைக்குமேனியன்
இறையுடைக்குலிசவேலெறிகலாதமுன்
சிறையுடைமலேயெனச்செல்லுஞ்செய்கையான். (உ௩)

மிடலுடையெம்பியைவீட்டும்வெஞ்சரம்
படருளராயினர்போலும்பாரென
உடலினைவழிந்துபோயுவரிநீருகக்
கடலினைப்புரையுறுமருவிக்கண்ணினுன். (உ௪)

உழுங்கதிர்மணியணியுமிழுமின்னினுன்
மழுங்கியநெடுங்கணின்வழங்குமாரியான்
புழுங்குவானமுங்கினுன்புடவியாரென
முழங்கிவந்திழிவதோர்முகிலும்போல்கின்றான். (உ௫)

வள்ளியுமரங்களுமலேயுமண்ணுறத்
தெள்ளுநுண்பொடிபடக்கடிதுசெல்கின்றான்
தள்ளுவன்கால்பொரத்தரணியிற்றணி
வெள்ளியம்பெருமலைபொருவுமேனியான். (உ௬)

எய்தினனிருந்தவரிரியல்போயினர்
அய்யனம்மாருதியழலுங்கண்ணினுன்
கய்தவநிசிசரக்கள்ளவேடத்தை
உய்திகொலினியெனுவுருத்துமுன்னின்றான். (உ௭)

வெங்கதம்வீசியமனத்தன்விம்மலன்
பொங்கியசோரிநீர்பொழியுங்கண்ணினுன்
சங்கையிற்சழக்கிலனென்னுந்தன்மையை
இங்கிதவகையினுலெய்தநோக்கினுன். (உ௮)

நோக்கினனின்றனனுணங்குகேள்வியான்
வாக்கினுலொருமொழிவழங்கலாதமுன்
தாக்கருஞ்சடாயுவைத்தருக்கினுயிர்
நீக்கினர்யாரதுநிரப்புவீரென்றான். (உ௯)

உன்னைநீயுள்ளவாறுரைப்பினுற்றதைப்
பின்னையானிரப்புதல்பிழைப்பின்றுதலால்
என்னமாருதியெதிரெருவைவேந்தனும்
தன்னையாந்தன்மையைச்சாற்றன்மேயினுன். (௩௦)

பின்பிறந்தாலெனவிளங்கெயிற்றினுய்
என்பிறந்தார்க்கிடையெய்தலாதவென்
பின்பிறந்தான்றுணைபிரிந்தபேதையேன்
முன்பிறந்தேனெனமுடியக்கூறினுன். (௩௧)

கூறியவாசகங்கேட்டுக்கோதிலான்
ஊறியதுன்பத்தினுவரியுட்புகா
ஏறினானுணர்த்தினானிகலிராவணன்
வீறியவாளிடைவிளைந்ததாமென்றான். (௩௨)

அவ்வுரைகேட்டலுமசனியேற்றினால்
தவ்வியகிரியெனத்தரையின்வீழ்ந்தனன்
வெவ்வுயிராவுயிர்பதைப்பவிம்மினான்
இவ்வுரையிவ்வுரையெடுத்தியம்பினான். (௩௩)

வேறு. இளையாநின்சிறகின்றிவெந்துகத்
தளையானேனுயிர்போதறக்கதோ
வளையாநேமியன்வன்மைசால்வலிக்
கிளையானேயிதுவென்னமாயமோ. (௩௪)

மலரோனின்றுளன்மண்ணும்விண்ணுமுண்
டுலையாநீடறமின்னுமுண்டரோ
நிலையார்க்கற்பமுநின்றதின்றுநீ
இலையானாயிதுவென்னதன்மையோ. (௩௫)

உடனேயண்டமிரண்டுமூந்துயிர்த்
திடநாள்வந்திருவோருமெய்தியான்
விடநீயேதனிச்சென்றவீரமும்
கடனேவெங்கலுழற்குமேன்மையோய். (௩௬)

ஒன்றாமூன்றுலகத்துளோரையும்
வென்றானென்னினும்வீரநிற்குநேர்
நின்றானேயவ்வரக்கனின்னையும்
கொன்றானேயிதுவென்னகொள்கையோ. (௩௭)

என்றென்றேங்கியிரங்கியின்னலால்
பொன்றுந்தன்மைபுகுந்தபோதவற்
கொன்றுஞ்சொற்கொடுணர்ச்சிநல்கினான்
வன்றிண்டோள்வரையன்னமாருதி. (௩௮)

தேற்றத்தேறியிருந்தசெங்கணான்
கூற்றொப்பான்கொலைவாளரக்கனோ
டேற்றுப்போர்செய்ததென்னிமித்தெனக்
காற்றின்சேயிதுகட்டுரைக்குமால். (௩௯)

எங்கோமானவ்விராமனில்லுளாள்
செங்கோலான்மகள்சீதைசெவ்வியாள்
வெங்கோல்வஞ்சன்விளைத்தமாயையால்
தங்கோனைப்பிரிவுற்றதன்மையாள். (௪0)

கொண்டேகுங்கொலைவாளரக்கனைக்
கண்டானும்பியறங்கடக்கிலான்
வண்டார்கோதையைவைத்துநீங்கெனாத்
திண்டேரானெதிர்சிந்தைசீறினான். (௪௧)

சீறித்தீயவனேறுதேரையும்
கீறித்தோள்கள் கிழித்தழித்தபின்
தேறித்தேவர்கடேவன்றெய்வவாள்
வீறப்பொன்றினன்மெய்ம்மையோவென்றான். (௪௨)

விளித்தானன்னதுகேட்டுமெய்ம்மையோய்
தெளித்தாடத்தருதீர்த்தன்மாட்டுயிர்
அளித்தானேயதுநன்றுநன்றெனாக்
களித்தான்வாரிகலுழ்ந்தகண்ணினான். (௪௩)

பைந்தாரெங்களிராமன்பத்தினி
செந்தாள்வஞ்சிதிறத்திறந்தவன்
மைந்தாவெம்பிவரம்பில்சீர்த்தியோ
டுய்ந்தானல்லதுலந்ததுண்மையோ. (௪௪)

அறமன்னானுடனெம்பியன்பினோ
டிறவுன்னாவுயிரொன்றவோவினான்
பெறவொண்ணாததோர்பெற்றிபெற்றவற்
கிறவென்னாமிதினின்பம்யாவதோ. (௪௫)

என்றென்றேங்கியிரங்கியின்புனற்
சென்றங்காடுதல்செய்துதீர்ந்தபின்
வன்றிண்டோள்வலிமாறிலாதவன்
துன்றுந்தாரவர்க்கின்னசொல்லினான். (௪௬)

வாழ்வித்தீரெனைமைந்தர்வந்துநீர்
ஆழ்வித்தீரலிர்துன்பவாழிவாய்
கேள்வித்தீவினைகீறினீரிருள்
போழ்வித்தீருரைபொய்யினீங்கினீர். (௪௭)

எல்லீரும்மவ்விராமநாமமே
சொல்லீரென்சிறைதோன்றுஞ்சோர்விலா
நல்லீரப்பயனண்ணுநல்லசொல்
வல்லீர்வாய்மைவளர்க்குமாண்பினீர். (௪௮)

என்றானன்னதுகாண்டும்யாமெனா
நின்றார்நின்றுழிநீலமேனியான்
நன்றாநாமநவின்றுநல்கினார்
வன்றோளான்சிறைவானந்தாயவே. (௪௯)

சிறைபெற்றான்றிகழ்கின்றமேனியான்
முறைபெற்றாமுலகெங்குமூடினான்
நிறைபெற்றாவிநெருப்புயிர்க்கும்வாள்
உறைபெற்றாலெனலாமுறுப்பினான். (௫௦)

தெருண்டான்மெய்ப்பெயர்செப்பலோடும்வந்
துருண்டானுற்றபலத்தையுன்னினார்
மருண்டார்வானவர்கோனைவாழ்த்தினார்
வெருண்டார்சிந்தைவியந்துவிம்முவார். (௫௧)

அன்னானைக்கடிதஞ்சலித்துநீ
முன்னாளுற்றதுமுற்றுமோதெனச்
சொன்னார்சொற்றதுசிந்தைதோய்வுறத்
தன்னாலுற்றதுதான்விளம்புவான். (௫௨)

வேறு. தாயெனத்தகையநண்பீர்சம்பாதிசடாயுவென்போஞ்
சேயொளிச்சிறையவேகக்கழுகினுக்கரசுசெய்வோம்
பாய்திரைப்பரவைஞாலம்படரிருள்பருகும்பண்பின்
ஆய்கதிர்க்கடவுட்டேரூரருணனுக்கமைந்தமைந்தர். (௫௩)

ஆயுயரும்பர்நாடுகாண்டுமென்றறிவுதள்ளி
மீயுயர்விசும்பினூடுமேக்குறச்செல்லும்வேலை
காய்கதிர்க்கடவுட்டேரைக்கண்ணுற்றுங்கண்ணுறாமுன்
தீயையுந்தீக்குந்தெய்வச்செங்கதிர்ச்செல்வன்சீறி. (௫௪)

முந்தியவெம்பிமேனிமுருங்கழன்முடுகும்வேலை
எந்தைநீகாத்தியென்றான்யானிருஞ்சிறையுமேந்தி
வந்தனென்மறைதலோடுமற்றவன்மறையப்போனான்
வெந்துமெய்யிறகுதீந்துவிழுந்தனென்விளிகிலாதேன். (௫௫)

மண்ணிடைவிழுந்தவென்னைவானிடைவயங்குவள்ளல்
கண்ணிடைநோக்கியுற்றகருணையான்சனகன்காதற்
பெண்ணிடையீட்டின்வந்தவானரரிராமன்பேரை
எண்ணிடையுற்றகாலத்திறகுபெற்றெழுதியென்றான். (௫௬)

தாழ்ந்தமாதவத்திலோகசாரங்கனுறையுஞ்சாரல்
வீழ்ந்தனென்சிறைகடீயவெவ்வுயிர்த்துளமுமெய்யும்
போழ்ந்தனதுன்பமூன்றவுயிர்ப்பொறைபோற்றகில்லா
தாழ்ந்தனெனாழ்ந்தவென்னையருந்தவனெதிர்ந்துதேற்றி. (௫௭)

கற்றிலார்போலவுள்ளக்களிப்பினாலமரர்காப்பூ
டுற்றிடக்கருதிமீப்போயாதபத்தனதுமேனி
முற்றழன்முருங்கமண்ணைமுயங்கினையினியென்சின்னாள்
மற்றுநின்னுயிரையோம்பாதிகழ்வதுமாலைத்தன்றால். (௫௮)

களித்தவர்கெடுதறிண்ணஞ்சனகியைக்கபடன்வெளவி
ஒளித்தவாய்துருவியுற்றவானரரிராமநாமம்
விளித்திடச்சிறைவந்தோங்கும்வெவ்வுயிர்த்தயரலென்றன்
றளித்தனனதனலாவியாற்றினேனுற்றன்மொய்ம்பீர். (௫கூ)

எம்பியுமிடரின்வீழ்வானேயதுமறுக்கவஞ்சி
அம்பரத்தியங்குமாணைக்கழுகினுக்கரசனுனன்
நம்பிமீர்தென்றன்மைநீரிவணடந்தவார்த்தை
உம்பருமுவக்கத்தக்கீருணர்த்துமினுணரவென்முன். (௬0)

என்றலுமிராமன்றன்னையேத்தினரிறைஞ்சியெந்தாய்
புன்றொழிலரக்கன்மற்றைத்தேவியைக்கொண்டுபோந்தான்
தென்றிசையென்னவுன்னித்தேடிநாம்வந்துமென்றூர்
நன்றுநீர்வருந்தல்வேண்டாநானிதுநவில்வலென்றுன். (௬க)

பாகொன்றுகுதலையாளைப்பாதகவரக்கன்பற்றிப்
போகின்றபொழுதுங்கண்டேன்புக்கனனிலங்கைபுக்கு
வேகின்றவுள்ளத்தாளைவெஞ்சிறையகத்துவைத்தான்
ஏகொன்றிற்காண்டிரந்திலிருந்தனளிறைவியின்னும். (௬௨)

யோசனையொருநூறுண்டாலொலிகடலிலங்கையவ்வூர்
பாசவெங்கரத்துங்கூற்றுங்கட்புலன்பரப்பவஞ்சும்
நீசனவ்வரக்கன்சீற்றநெருப்புக்குநெருப்புநீங்கள்
ஏசறுங்குணத்தீர்சேறலெப்பரிசியைவதென்முன். (௬௩)

நான்முகத்தொருவன்மற்றைநாரியோர்பாகத்தண்ணல்
பான்முகப்பரவைப்பள்ளிப்பாம்பணைபரனென்றாலும்
காலனுக்கேயுஞ்சேறலரிதிதுகடலின்றன்மை
மேலுமக்குறுவதெண்ணிச்செல்லுமின்விளிவினுளீர். (௬௪)

எல்லீருஞ்சேறலென்பதெளிதன்றவ்விலங்கைமூதூர்
வல்லீரேலொருவரேகிமறைந்தவணொழுகிவாய்மை
சொல்லீரேதுயரைநீக்கித்தோகையைத்தெருட்டிமீடிர்
அல்லீரேலென்சொற்றேறியுணர்த்துமினழகற்கம்மா. (௬௫)

காக்குநரின்மையாலக்கழுகினமுழுதுங்கன்றிச்
சேக்கைவிட்டிரியல்போகித்திரிதருமதனைத்தீர்ப்பான்
போக்கெனக்கடுத்தநண்பீர்நல்லதுபுரிமினென்னு
மேக்குறவிசையிற்சென்முன்சிறையினல்விசும்புபோர்ப்பான். (௬௬)

சம்பாதிப்படலம் முற்றிற்று. ஆ திருவிருத்தம் - க0கசு.

---

# ௧௫ - வது. மகேந்திரப்படலம்.

பொய்யுரைசெய்யான்புள்ளரசென்றேபுகலுற்றார்
கய்யுறைநெல்லித்தன்மையினெல்லாங்கரைகண்டாம்
உய்யுரைபெற்றாநல்லவையெல்லாமுறவெண்ணிச்
செய்யுமினொன்றோசெய்வகைநொய்திற்செயவல்லீர். (௧)

சூரியன்வெற்றிக்காதலனோடுஞ்சுடர்விற்கை
ஆரியனைச்சென்றேதொழுதுற்றதறைகிற்பீர்
சீருதன்முற்றுந்தேருதல்கொற்றச்செயலம்மா
வாரிகடப்போர்யாவரெனத்தம்வலிசொல்வார். (௨)

மாளவலித்தேமென்றுமிமாளாவசையோடு
மீளவுமுற்றேமன்னவைதீரும்வெளிபெற்றேம்
காளநிறத்தோடொப்பனவிந்நேர்கடறாவுற்
றாளுநலத்தீராளுமினெம்மாருயிரம்மா. (௩)

நீலன்முதற்பேர்போர்கெழுகொற்றநெடுவீரர்
சாலவுரைத்தார்வாரிகடக்குந்தகவின்மை
வேலைகடப்பன்மீளமிடுக்கின்றெனவிட்டான்
வாலியளிக்கும்வீரவயப்போர்வசையில்லான். (௪)

வேதமனைத்துந்தேர்தரவெட்டாவொருமெய்யன்
பூதலமுற்றுமீரடிவைத்துப்பொலிபோழ்தியான்
மாதிரமெட்டுஞ்சூழ்பறைவைத்தேவரமேரு
மோதவிளைத்தேதாளுலைவுற்றேன்விறன்மொய்ம்பீர். (௫)

ஆதலினிப்பேரார்கலிகுப்புற்றகழிஞ்சி
மீதுகடத்தித்தீயவருட்கும்வினையோடும்
சீதைதனைத்தேராவரமுற்றுந்திறனின்றென்
றோதியிறுத்தானாலுமுகத்தானுதவுற்றான். (௬)

யாமினியிப்போதாரிடர்துய்த்திங்கினியாரைப்
போமெனவைப்பேமென்பதுபுன்மைப்புகழன்றே
கோமுதல்வர்க்கேறாகியகொற்றக்குமராநம்
நாமநிறுத்திப்பேரிசைதைக்குநவையில்லோன். (௭)

ஆரியன்முன்னர்ப்போதுறவுற்றவதனானும்
காரியமெண்ணிச்சோர்வறமுற்றுங்கடனானும்
மாருதியொப்பார்வேறிலையென்னாவயன்மைந்தன்
சீரியன்மற்றோளாண்மைதெரிப்பானிவைசெப்பும், (௮)

மேலைவிரிஞ்சன்வீயினும்வீயாமிகைநாளீர்
நூலைநயந்துநுண்ணிதுணர்ந்தீர்நுவறக்கீர்
காலனுமஞ்சுங்காய்சினமொய்ம்பீர்கடனின்றீர்
ஆலநுகர்ந்தானன்னவயப்போரடர்கிற்பீர். (௯)

வெப்புறுசெந்தீநீர்வளியாலும்விளியாதீர்
செப்புறுதெய்வப்பல்படையாலுஞ்சிதையாதீர்
ஒப்புநினைப்பார்நும்மலதில்லீரொருகாலே
குப்புறினண்டத்தப்புறமேயுங்குதிகொள்வீர். (௧௦)

நல்லவுமொன்றேதீயவுநாடிநவைதீரச்
சொல்லவும்வல்லீர்காரியநீரேதுணிவுற்றீர்
வெல்லவும்வல்லீர்மீளவும்வல்லீர்மிடலுண்டேல்
கொல்லவும்வல்லீர்தோள்வலியென்றுங்குறையாதீர். (௧௧)

மேருகிரிக்குமீதுறநிற்கும்பெருமெய்யீர்
மாரிதுளிக்குந்தாரையிடுக்கும்வரவல்லீர்
பாரையெடுக்குநோன்மைவலத்தீர்பழியற்றீர்
சூரியனைச்சென்றெண்ணடையகத்துந்தொடவல்லீர். (௧௨)

அறிந்துதிறத்தாறெண்ணியறத்தாறழியாமை
மறிந்துருளப்போர்வாலியைவெல்லுமதிவல்லீர்
பொறிந்திமையாக்கோன்வச்சிரபாணம்புகழூழ்க
எறிந்துழிமற்றோர்புன்மயிரேனுமிழவாதீர். (௧௩)

போர்முனைதிர்ந்தான்மூவுலகேனும்பொருளாகா
ஓர்வில்வலங்கொண்டொல்கலில்வீரத்துயர்தோளீர்
பாருலகெங்கும்பேரிருள்சீக்கும்பகலோன்முன்
தேர்முனடந்தேயாரியநூலுந்தெரிவுற்றீர். (௧௪)

நீதியினின்றீர்வாய்மையமைந்தீர்நினைவானும்
மாதர்நலம்பேணாதுவளர்ந்தீர்மறையெல்லாம்
ஓதியுணர்ந்தீரூழிகடந்தீருலகினும்
ஆதியயன்றானேயெனயாதுமறைகின்றீர். (௧௫)

அண்ணலமைந்தற்கன்புசிறந்தீரதனானே
கண்ணியுணர்ந்தீர்கருமநுமக்கேகடனென்னத்
திண்ணிதமைந்தீர்செய்துமுடிப்பீர்சிதைவின்றால்
புண்ணியமொன்றேயென்றுநிலைக்கும்பொருள்கொண்டீர். ()

அடங்கவும்வல்லீர்காலமதன்றேலமர்வந்தால்
மடங்கன்முனிந்தாலன்னவலத்தீர்மதிநாடித்
தொடங்கியதொன்றேமுற்றுமுடிக்குந்தொழிலல்லால்
இடங்கெடவெவ்வாயூறுகிடைத்தாலிடையாதீர். (௧௭)

ஈண்டியகொற்றத்திந்திரனென்பான்முதல்யாரும்
பூண்டுநடக்குநன்னெறிசாபப்பொறையானும்
பாண்டியநீரேயஃதினியுய்க்கும்படிவல்லீர்
வேண்டியபோதேவேண்டியதுய்க்கும்வினைவல்லீர். (கஅ)

ஏகுமினேகியெம்முயிர்நல்கியிசைகொள்ளீர்
ஓகைகொணர்ந்தும்மன்னையுமின்னற்குறையில்லாச்
சாகரமுற்றுந்தாவிடுநீரிக்கடலுருவும்
வேகமமைந்தீரென்றுவிரிஞ்சன்மகன்விட்டான். (கக)

சாம்பனியம்பத்தாழ்வதனத்தாமரைநாப்பண்
ஆம்பல்விரிந்தாலன்னசிரிப்பானறிவாளன்
கூம்பலொடுஞ்சேர்கைக்கமலத்தன்குலமெல்லாம்
ஏம்பல்வரத்தன்சிந்தைதெரிப்பானிவைசொன்னான். (உ0)

வேறு. இலங்கையையிடந்துவேரோடிவ்வயிற்றருகென்றாலும்
விலங்கினர்தம்மையெல்லாம்வேரொடும்விளியநூறிப்
பொலன்குழைமயிலைக்கொண்டுபோதெனப்புகன்றிட்டாலும்
கலங்கலீருரைத்தமாற்றமுடிக்குவல்கடிதுகாண்டிர். (உக)

யோசனையொன்றுநூறுமுள்ளடியுள்ளதாக
ஈசன்மண்ணளந்ததேய்ப்பவிருங்கடலினிதுதாவி
வாசவன்முதலோர்வந்துமலையினுமிலங்கைவாழும்
நீசரையெல்லாநூறிநினைத்ததுமுடிப்பல்பின்னும். (உஉ)

நீயிரேநினையின்முன்னேநெடுந்திரைப்பரவையேழும்
தாயுலகனைத்தும்வென்றுதையலைத்தருதற்கொத்தீர்
போயிதுபுரிதியென்றுபுலமைதீர்புன்மைகாண்டற்
கேயினிரென்னிலென்னிற்பிறந்தவர்யாவரின்னும். (உங)

முற்றுநீருலகமுற்றும்விழுங்குவான்முழங்கிமுந்நீர்
உற்றதேயெனினுமண்டமுடைந்துபோயுயர்ந்ததேனும்
இற்றைநும்மருளுமெங்கோனேவலுமிரண்டுபொலும்
கற்றைவார்சிறைகளாகக்கலுழனிற்கடப்பல்காண்டிர். (உச)

ஈண்டினிதுறைமின்யானேயெறிகடலிலங்கையெய்தி
மீண்டிவண்வருதல்காறும்விடைதம்மின்விரைவினென்ன
ஆண்டவருவந்துவாழ்த்தவலர்மழையமரர்தூவச்
சேண்டொடர்சிமயத்தெய்வமகேந்திரத்தும்பர்சென்றான் (உரு)

பொருவருவேலைதாவும்புத்தியான்புவனந்தாய
பெருவடிவுயர்ந்தமாயோன்மேக்குறப்பெயர்ந்ததாள்போல்
உருவறிவடிவினும்பரோங்கினனுவமையாலும்
திருவடியென்னுந்தன்மையாவர்க்குந்தெரியநின்றான். (உசா)

பார்நிழல்பரப்பும்பொற்றேர்வெயிற்கதிர்ப்பரிதிமைந்தன்
போர்நிழல்பரப்புமேலோர்புகழெனவுலகம்புக்குத்
தார்நிழல்பரப்புந்தோளான்றடங்கடருவாமுன்னம்
நீர்நிழலுவரிதாவியிலங்கைமேற்செல்லநின்றான். (௨௭)

பருவாயமடங்கல்வைகும்படர்வரைமுழுதுமூழ்க
உருவாயவிடங்கொணாகத்தொத்தவால்சுற்றியூழின்
நெருவாயசிகரகோடிநெரிவனதெரியநின்றான்
மருவாமைமுதுகிற்றேன்றுமந்தரமெனலுமானான். (௨௮)

மின்னெடுங்கொண்டலுளின்வீக்கியகழலினார்ப்பத்
தன்னெடுந்தோற்றம்வானோர்கட்புலத்தெல்லைதாவ
வன்னெடுஞ்சிகரகோடிமகேந்திரமண்டந்தாங்கும்
பொன்னெடுந்தூணின்பாதசிலையெனப்பொலிந்துநின்றான். (௨௯)

மகேந்திரப்படலம் முற்றிற்று. ஆ திருவிருத்தம் - ௧௦௪௫.

## கிட்கிந்தாகாண்டம் முற்றிற்று.

---

## அட்டவணை.



ஆக படலம் ௧௬-இ திருவிருத்தம், ௧௦௪௫.

---

*(Signed)* ..............................................................